# ஸ்ரீ ராமாநுஜன் 193

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன சபாமூலமாக மாதந்தோறும் வெளிவரும்பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 17 | 1965ஹு ஜனவரிமீ<br>குரோதிஹு தைமீ | ஸஞ்சிகை 1 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—79

கருமால் திறத்திலொரு கன்னிகையாம் மாறன் *
ஒருமா கலவி யுரைப்பால்—* திரமாக
அந்நியருக் காகா தவன்றனக்கே யாகு முயிர் *
அந்நிலையை யோரு நெடிதா.

| | | | |
|---|---|---|---|
| கரு மால் திறத்தில் | ஸ்ரீகிருஷ்ணபகவான் விஷயத்தில் | திரம் ஆக | ஸ்திரமாக |
| ஒரு கன்னிகை ஆம் மாறன் | ஒரு கன்னிகையின் தன்மையை அடைந்த ஆழ்வார் | உயிர் அன்னியருக்கு ஆகாது | ஆத்மா அந்யசேஷப்படாமல் |
| ஒரு மா கலவி உரைப்பால் | ஒரு விலக்ஷண ஸம்ச்லேஷ லக்ஷணங்களை (த்தோழிப் பேச்சாலே) அருளிச்செய்ததனால் | அவன் தனக்கே ஆகும் அந் நிலையை | அப்பெருமானுக்கே உரித்தாம் நிலைமையை |
| | | நெடிது ஆ | தீர்க்கமாக |
| | | ஒரும் | ஆராய்மின். |

***—ஆழ்வார் தம்முடைய அநந்யார்ஹத்வத்தைத் தோழி பாசுரத்தாலேவெகு சமத்காரமாக அருளிச்செய்த பதிகம் * கருமாணிக்கமலை யென்பது. பராங்குசநாயகி விவாஹ யோக்யமான பருவம் வாய்ந்தவளாக இருந்ததனால் அவளுக்கு விவாஹம் நடத்தவேணுமென்று மாதா பிதாக்கள் எண்ணி ஸ்வயம்வர ஸந்நாஹம் பண்ணின வளவிலே * அன்றிப்பின் மற்றொருவர்கு என்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலை யெம் மாயற்கு அல்லால் * மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் * என்னும்படியான தன்மை வாய்ந்திருக்கிற தலைவி அந்த விவாஹ ஸன்னாஹத்தைத் தவிர்க்கவேண்டி ஏற்கெனவே தனக்கு எம்பெருமானோடே விவாஹமாய்விட்டதென்பதைத் தன் வாக்காலே சொல்லிக்கொள்ள இயலாதாகையாலே தோழி ஊஹமாகச் சொல்லுகிற பாசுரத்தாலே [ஏற்கெனவே கலவி நடந்துவிட்டாப் போலிருக்கிறதே! என்று தெரிவிக்கும் முகத்தாலே] அநந்யார்ஹத்வம் வெளியிட்டபடி.

இப் பாட்டினீற்றடியில் "இந்நிலையை" என்கிற பாடம் தவறு; "அந்நிலையை" என்பதே நன்கு பொருந்தும்; ஆ என்பது ஈற்றுச் சீராதலால்.

கருமாணிக்கமலை யென்கிற இத் திருவாய்மொழி தோழி பாசுரமாய்ச் செல்லு கிறது. திருவாய்மொழியாயிரத்தில் தோழி பாசுரமாக வரும் பதிகங்கள் மூன்று; * தீர்ப்பாரையாமினியும் * துவளில் மாமணி மாடமும் * இக் கருமாணிக்க மலையும். இம் மூனறு பதிகங்களிலும், ப்ரணவத்தில் உகாரத்தின் பொருளான அநந்யார்ஹத் வம் வெளியிடப்படுகிறது. * தீர்ப்பாரை யாமினியில் வெறியாடலை விலக்கின முகத் தாலே அது வெளியிடப்பட்டது; * துவளில் மாமணிமாடத்தில் "இனியுமக்காசை யில்லை விடுமினோ" என்று பலகாலும் தாய்மாரை நோக்கிச் சொல்லுகிற முகத்தாலே அது வெளியிடப்பட்டது; இப்போது இத்திருவாய்மொழியில் அதுதன்னை வெளியிடு கிற விதம் கேண்மின்; பராங்குச நாயகியாகிற தலைமகள் பதிஸம்யோகத்திற்குரிய வயதுமுதிர்ந்து நின்றவளவிலே தாய் தந்தையர் ஸ்வயம்வரம் கோடித்து நகரத்திலே மணமுரசு அறைவிக்க, அஃதறிந்த தோழியானவள் "அன்றிப்பின் மற்றொருவர்க்கு என்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலை யெம் மாயற்கல்லால்" என்று திண்ணிய அத்யவஸாயம் கொண்டிருக்கிற இப்பெண்பிள்ளை, இப்படி தாய்தந்தையர் கோடிக் கின்ற படியையறிந்தால் உயிர்மாய்வளே யென்று துடித்து, இப் பெண்பிள்ளைக்குக் குட்டநாட்டுத் திருப்புலியூர்ப் பெருமானோடே ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமானபடியைத் தோழிதானறிந்திருந்தும் அதை வெட்ட வெளிச்சமாகத் தாய்மார்க்குத் தெரிவித்தால் நம்மேல் சீற்றமுண்டாகும்; தெரிவியாதிருந்தால், தலைவியும் லஜ்ஜையாலே வாளா விருப்பளாகையாலே விபரீதமான கோடிப்பு நிறைவேறி அனர்த்தமாகும்; ஆகவே இப்போதொரு ஸதுபாயம் செய்யவேண்டும்; நமக்கும் ஏற்கெனவே இது தெரியாது போலே காட்டிக்கொண்டு அப்போதுதான் நிரூபித்து அறிந்துகொள்வது போல் அபிநயித்து ஒருவாறு உண்மையை வெளியிட்டு விடுவோம் என்று துணிந்து, அம் மனைமீர்! நம் பெண்பிள்ளையின் நிலைமைகளைக் காணுமிடத்து ஸம்ச்லேஷம் நேர்ந்து விட்டதுபோல் தெரிகிறதே, உங்களுடைய கோடிப்புக்கு ப்ரஸக்தியில்லைபோல் காண் கிறதே என்று மத்யஸ்தோக்தியாகச் சொல்லி நிற்கிறாள்; இவ் வழியாலே ஆழ்வா ருடைய அநந்யார்ஹத்வம் வெளியிடப்படுகிறதாயிற்று. .... ... (79)

## — ஸ்ரீராமாநுஜனுக்குச் சந்தா செலுத்தியவர்கள் —

1. Sri V. K. Srinivasan, Asst. Station Master, Nittoor.
2. ,, R. Padmanabhan, Chidambaram.
3. ,, அகரம் R. வரதாசாரியர், T. Nagar.
4. ,, கூரம். வீ. துரைசாமி ஐயங்கார், நெல்லூர்.
5. ,, M. S. ஸௌந்தரராஜன், கோயம்புத்தூர்.
6. ,, K. P. பிச்சுமணி, B.O.L. Ahamedabad.
7. ,, G. S. Chari, Bangalore.
8. ,, மாளிகைமேடு K. நாராயணசாமி ரெட்டியார்.
9. ஸ்ரீமதி ரங்கம் ஜானகியம்மா, ஆழ்வார்திருநகரி.
10. Sri M. R. சேஷாத்ரி ஐயங்கார், மண்ணடி, சென்னை.
11. ,, A. Srinivasan Teacher, West Mambalam.
12. ,, T. S. Krishnaswami, T. Nagar.
13. ,, C. V. Rajan Rtd. P. M. G. Bangalore.
14. ,, G. Srinivasachariar, Madras - 24.
15. ஸ்ரீமதி விஜயவல்லியம்மாள், சென்னை,

ஸ்ரீः

# புத்தாண்டு பிறப்பு

நமது ஸ்ரீராமாநுஜன் பதினாறு பிராயங்களைச் சுகமாகக் கடத்தி இன்று பதினேழாவது பிராயத்தில அடிவைத்து விட்டது. ஸ்ரீவைஷ்ணவ வுலகுக்கும் ஆஸ்திகவுலகுக்கும் தார்மிகவுலகுக்கும் இதுகாறும் ஸேவை செய்ததுபோலவே இனியும் செய்யக் கடமைப்பட்டிருக்கின்றது. இதற்கு ஏற்பட்டுள்ள ஸ்வல்பசந்தாவை நம்முடைய வேண்டுகோளை எதிர்பாராமல் கால காலத்தில் தாமாகவே செலுத்தி உதவிபுரிந்து வருகின்ற மஹான்கள் பண்டு போலவே மேன்மேலும் உபகரித்துவரக் காத்திருக்கிறார்கள். ஆகவே அவர்களைப்பற்றி இங்கு நாம் வேண்டிக்கொள்ள வேண்டியது ஏதுமில்லை. உபகரிக்க மனமில்லாமல் உபேக்ஷித்து வருபவர்களும் தங்கள் இயல்பை மாற்றிக்கொள்ளப் போகின்றிலர்; அன்னவர்களைப் பற்றியும் ஈண்டு எழுதவேண்டியதொன்றுமில்லை. "ஆள்கின்றானாழியான் ஆரால் குறையுடையம்" என்கிற நம்மாழ்வார் பாசுரத்தை மனமாரச் சிந்தனை செய்து நாம் விசாரமற்ற நெஞ்சினராய் மிக்க மகிழ்ச்சியுடனேயே இதனை நடத்தி வருகின்றோம்.

இதை மட்டுமன்று; வைதிகமனோஹரா என்கிற ஸம்ஸ்க்ருத ஹிந்தீ பத்ரிகையையும், 'ஸ்ரீராமாநுஜபத்ரிக' என்கிற தெலுங்கு பாஷைப்பத்ரிகையையும் சந்தாதாரர்களின் உதவியில் கண்ணோட்டமில்லாமலே 'நமக்குக் கர்த்தவ்யம் என்கிற உறுதிகொண்டே நடத்தி வருகின்றோம். நாம் பிறக்கும்போது ஒரு காசு கொண்டு வந்திலோம்; இறக்கும் போதும் ஒன்று கொண்டு போவோமல்லோம். அரைநாண் கயிற்றையும் அறுத்துக்கொண்டு போகவிடுகின்றார்கள். இதனை நன்கு விமர்சிக்க வல்லவர்கள் பொருளின் வரவையும் செலவையும் பொருள்படுத்தக் காரணமில்லை.

ஆனால் ஒன்றுமட்டும் நம்முள்ளத்தில் வேலை செய்கின்றது. ஐந்து நிமிஷத்தில் ஏடுவடாகத் தள்ளிப் பார்த்துவிட்டுக் கீழே எறியப்படுகின்ற பத்ரிகைகளுக்கு லக்ஷக் கணக்கில் சந்தாதாரர்கள் சேருகின்றார்கள் என்பதேயாம் அது. ஆகாசத்தில் பந்தல் போடப்படுகின்றதென்றால் அதைக் காண லக்ஷக்கணக்கான ஜனங்கள் குழுமுகின்றார்களென்பதும், நிலத்தில் போடும் பந்தலில் வியப்புறுவாரில்லையென்பதும் உள்ளது தானே.

அன்பர்களைப் பிரார்த்திக்க வேண்டுவது நம்முடைய கடமை. அதனால் அன்பர்களையும் அபிமானிகளையும் நோக்கிப் பிரார்த்திக்கின்றோம்—நமது ஸ்ரீராமாநுஜனை முன்போலவும் முன்னிலுங்காட்டில் விசேஷமாகவும் அபிமானிக்க வேணுமென்று.

இப்பத்திரிகையில் வெளிவரும் விஷயங்கள் யாவும் ஆஸ்திக வைதிகர்களுக்கு அதிமாத்ரம் ஆனந்த ஸந்தாயகமாயிருக்கின்றன வென்னுமிடத்தை அடிக்கடி ஆப்தர்கள் அருளும் திருமுகங்களினாலறிந்து அகமகிழ்கின்றோம். இந்த நிலைமை மேன்மேலும் அபிவிருத்தியடைந்து செல்லுமென்பதை நாம் விஜ்ஞாபிக்க வேணுமோ?

எம்பெருமான் தன்னுடைய அவதார ப்ரயோஜனங்களைப் பேசுமிடத்து "பரித்ராணாய ஸாதூநாம்" என்ற வளவோடு நில்லாமல் "விநாசாய ச துஷ்க்ருதாம்" என்றும் பேசினபடியாலே ஸன்மத ஸ்தாபனத்தோடு கூட துர்மத நிரஸனமும் ப்ராப்தமே யென்கிற அத்யவஸாயத்தினால் நமது ஸ்ரீராமாநுஜனில் ஸன்மத ஸ்தாபன பரங்களான வியாஸங்களோடு கூட துர்மத நிரஸன நிபுணங்களான வியாஸங்களையும் ஊடேயூடே வெளியிட்டு வருகிறோம். எந்த விஷயத்திலும் விவக்ஷிதங்களும் வக்தவ்யங்களுமான அம்சங்களை உபேக்ஷிப்போமல்லோம். ஆகவே பரமத நிரஸன பரங்களான வியாஸங்களும் இப்பத்ரிகையில் இடம்பெறுவதுபற்றிப் பிராமாணிகர்கள் உகந்தேயிருப்பார்கள். .... .... .... .... *

# ஸ்ரீராமாநுஜ சரித்ர தத்துவம்

— ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர் —

## முன்னுரை.

பி. ஸ்ரீ. என்று ப்ரஸித்தரான ஓர் ஆசிரியர் சில மாதங்களுக்கு முன்பு ஸ்ரீராமாநுஜர் என்றொரு தமிழ் நூல் மிக விரிவாக வெழுதி வெளியிட்டிருந்தாராம். ஆனால் அதனை நான் இன்றுவரை பார்வையிட நேரவில்லை. வெகு நேர்த்தியாக எழுதப்பட்டிருப்பதாக மட்டும் செவியுறுகின்றேன். அவ்வாசிரியர் சிறந்த ஆஸ்திகர். பல நூல்களைப் படித்தவர்; ஆழ்ந்த ஆராய்ச்சிகளிலும் வல்லுநர். அவர் எழுதிய தென்றால் மேம்பட்டிருக்குமென்கிற நம்பிக்கை எனக்குண்டு. ஆனால் சரித்திர விஷயங்களில் அபிப்ராய பேதங்கள் ஏற்படுவது ஸஹஜம். ஸ்ரீராமாநுஜரைப் பற்றிப் பலர் பல நூல்களை வசன நடையில் எழுதியுள்ளார்கள். அவற்றில் பி. ஸ்ரீ. நம்பிக்கை கொண்டு சில புதிய விஷயங்களையும் எழுதியிருக்கக் கூடும். அவை எந்த ஆதாரத் தைக்கொண்டு எழுதப்பட்டவை யென்று விமர்சிப்பது நடுநிலையாளர்க்கு உரித் தாகும். 3—1—65 Sunday வெளிவந்த ஹிண்டுவில் S. N. ஸ்ரீராமதேசிகன் என்னு மொரு நண்பர் அப்புத்தகத்தை விமர்சிக்கப் புகுந்து எழுதியிருப்பவைகளை வாசித் தேன். உலகுக்குத் தெளிவு பிறப்பிக்க வேண்டுவது மிக அவசியமென்று தோன் றினமையால் இஃதெழுதுகின்றேன். இதன் ஸாரம் ஆங்கிலத்திலும் வெளிவரும். *

---

ஸ்ரீ வைஷ்ணவமத ஸ்தாபநாசாரியரான ஸ்ரீ ராமாநுஜர்காலம் இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரம் வருஷமாகிறது. அப்பேராசிரியருடைய சரித்திரங்களின் உண்மையை நாம் தெரிந்து கொள்வதும் பிரவசனம் செய்வதும் பரிகணிதர்களான முன்னோர்களின் நூல்களைப் பின்பற்றியே யாகவேண்டும். ஆழ்வார்களெல்லாருடை யவும் ஸ்ரீமந்நாதமுனிகள் முதலாக நம்பிள்ளைவரையிலுமுள்ள ஆசாரியர்களுடையவும் சரித்திரங்களைத் தெரிந்துகொள்ளத் தென்மொழியிலும் வடமொழியிலும் புராதன நூல்கள் பிராமாணிகங்களாகத் தொன்றுதொட்டுக் கொள்ளப்பட்டு வருகின்றன. தென்மொழியில் குரு பரம்பராப் பிரபாவம் என்கிற நூல் நம்பிள்ளையின் சிஷ்யரான பின்பழகிய பெருமாள் ஜீயரால் அருளிச் செய்யப்பட்டது. இதற்கு ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்று ப்ரஸித்தி. பன்னீராயிரப்படி குருபரம்பரையென்றும் மூவாயிரப்படி குருபரம்பரையென்றும் அச்சிடப் பட்டிருப்பவை மிகப் பிற்பட்டவர்க ளால் எழுதப்பட்டவை யாதலால் அவை பிரமாணங்களாகக் கொள்ளப்பட உரியன வல்ல. முன்னம் சொன்ன ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவமானது குருமுகமாகக் கேட்கும் காலக்ஷேப க்ரந்தங்களுள் ஒன்றாகக் கொள்ளப்பட்டு இற்றைக்கும் அது காலக்ஷேபக்ரந்தமாகவே விளங்கி வருகின்றது. இந்த நூலை ஒருசாரார் அப்ரமாண மென்றால் இதைப்பற்றி இங்கு நாம் போராட வருகின்றிலோம். ஒருவகுப்பினரின் கருத்தின்படி இது அப்ரமாணமாகவே யிருந்திடுக. இதிலும் சிற்சில சரித்திரங்கள் இடைச் செருகலாய்ப் புகுந்திருக்குமோவென்று பெரியார்கள் சங்கிப்பதுண்டு. ஸ்ரீ ராமாநுஜநுடைய கீதாபாஷ்யத்திற்குத் தாத்பர்ய சந்திரிகையுரை யெழுதிய ஸ்ரீமந் நிகமாந்தவாசிரியர் (அத்யாயம் 11, ச்லோகம் 27ல்) எழுதுகிறார்—'மூன்று

மத்யாயத்தில் யாதவப்ரகாசியர்கள் ஐந்து சுலோகங்களைச் சிலர் படிக்கிறார்களென்று காட்டி வியாக்கியானித்திருப்பதாகவும் இங்கும் சில சுலோகங்கள் காண்பதாகவும் எழுதி இவற்றினுண்மையைப் பகவானே அறிய வேண்டும்' என்று. அந்த சுலோகங்கள் ப்ரக்ஷிப்தங்களென்பதை ஸ்வாமியறிந்து வைத்தும் இங்ஙனே யெழுதியிருப்பது குறிக்கொள்ளத் தக்கது. ப்ரக்ஷேபமென்பது ஸ்ரீராமாயண பாரதாதிகளிலுங்கூட ஏற்பட்டிருப்பதை மஹான்கள் நிரூபிக்கிறார்கள். அதனால் மூலக்ரந்தத்தையே அப்ரமாணமென்று தள்ளிவிடுவது ஸாஹஸமாகும். பிரகிருதம் ஸ்ரீராமாநுஜர் சரிதையைப்பற்றி மட்டும் சில விமர்சங்களைச் செய்ய நாம் முன் வந்திருக்கிறோமேயொழிய ஆழ்வார்களினுடையவோ மற்ற ஆசாரியர்களினுடையவோ சரிதைகளைப்பற்றி இப்போது விசாரமில்லை.

ஸ்ரீ ராமாநுஜர் ஸாமான்ய புருஷரல்லர். அக்காலத்திலேயே உலகம் நிறைந்த புகழாளரான அவருடைய சரிதைகளை அவருடைய காலத்திலேயே பல மஹான்கள் வடமொழியில் சுலோகமாகவும் வசனமாகவும் எழுதி வைத்தார்கள். அவற்றுள் இரு மஹான்களின் இரு நூல்கள் அந்நாள் தொடங்கியே மிகவும் பிரஸித்தமாக பிரசாரத்திலிருந்து வருகின்றன. அவையாவன (1) கருடவாஹனபண்டிதரியற்றிய திவ்ய ஸூரிசரிதகாவ்யமும் (2) ஆந்த்ர பூர்ணர்யரென்னும் வடுகநம்பி இயற்றிய யதிராஜவைபவமுமாம். இவை தெலுங்குலிபியிலும் தேவநாகரலிபியிலும் அச்சேறியு மிருக்கின்றன. வடுகநம்பி யியற்றிய யதிராஜ வைபவம் கடைசியாக மைஸூர் ஸ்ரீ பரகால மடாதிபதி ஸ்வாமிகளால் பரிசோதிக்கப்பெற்று வெகு ரமணீயமான முறையில் ஷை மடத்தின் மூலமாகவே அச்சாகி வெளிவந்துள்ளது.

பிரகிருதம் ஸ்ரீ ராமாநுஜருடைய சரிதையில் அஸங்கதமென்று S. N. R. எடுத்துக்காட்டுகிற சிலவரலாறுகளுள் வீரசைவனை சோழராஜனுடைய தொந்தரவு ஏற்பட்ட காலத்தில் ஸ்ரீராமாநுஜர் வெள்ளை சாத்திக்கொண்டு மேல்நாட்டுக் கெழுந்தருளினதாகவும், கூரத்தாழ்வான் காஷாயமணிந்து கொண்டு ராஜஸபைக்கு எழுந்தருளினதாகவும் பிரஸித்தமாக வழங்கிவரும் இதிஹாஸம் அஸங்கதமென்பது பிசகு; இந்த வரலாறு பிராமாணிகமே யொழிய நவீன கல்பிதமன்று என்பதைப் புராதனமான அதார்ட்டிகளைக் கொண்டு நிரூபிக்கிறேன்.

வடுகநம்பி ஸாதித்த யதிராஜ வைபவமென்று மேலே ப்ரஸ்தாவிக்கப்பட்ட வடமொழி நூல் 114 சுலோகங்கள் கொண்டது இதைக் கடைசியாக அச்சிட்டிருப்பவர் Mysore ஸ்ரீ பரகால மடாதிபதி ஸ்வாமிகளென்பதும் காட்டினேன். "ஸ்ரீயதிராஜ அந்தரங்கச் சாத்ர-வடுகபூர்ணவிரசிதம் யதிராஜ வைபவம் ஸம்பூர்ணம்" என்று பரகாலஸ்வாமி தமது திருக்கையாலெழுதி முடித்திருக்கிறார். ஆரம்பத்திலும், "ஸ்ரீராமாநுஜ யோகீந்த்ர க்ஷீர கைங்கர்ய சாலிநே, நமோ வடுக பூர்ணய மஹநீயகுணப்தயே" என்று வடுக நம்பியின் தனியனை வெளியிட்டுள்ளார். இதனால் ஸாக்ஷாத் ஸ்ரீராமாநுஜர் காலத்திலேயே இந்த யதிராஜ வைபவம் அவதரித்த தென்பதை ஸ்ரீபரகால மடம் கல் வெட்டாக்கி வைத்தது. இதில் 95, 96 சுலோகங்களாவன—

"காஷாயத்ருத் கூரபதிஸ் த்ரிதண்டீ ப்ராயாந் மஹாபூர்ணயுதஸ்து தத்ர,
வாத்ஸ்யேச முக்க்யைஸ் ஸஹிதோ யதீச: சுக்லாம்பர: ப்ராப திசம் ப்ரதீசீம்
தத்ர க்வசித் கைச்சந சிஷ்யபூதை: காஷாயதண்டாதி ஸமர்ப்பிதம் ஸ:,
சாஸ்த்ரோக்த மார்க்கேண புந: ப்ரக்ருஹ்ய யதாக்ரமாராதந தத்பரோபூத்." என்பன.

இந்த யதிராஜ வைபவம் 95 வருடங்களுக்கு முன்பு ஒரு விசை அச்சாகியுள்ளது. அந்தப் பதிப்பில் பல சொற்பிழைகள் புகுந்திருந்ததனால் இது ஸ்ரீராமாநுஜர் காலத்தில் அவதரித்ததாயிருக்குமோவென்று சந்தேகிக்க இடமிருந்தது. மிகச் சிறந்த வித்

வத்வரேண்யரான ஸ்ரீ பரகால ஸ்வாமி ஓலை ஸ்ரீகோசங்களைக் கொண்டு வெகு நன்றாக சோதித்து ஸம்பரிஷ்க்ருதமாக அச்சிட்டு விட்டபடியால் இதில் எவ்விதமான சங்கையும் புக முடியாததாய் விட்டது, இப்பதிப்பில் "Printed by H. Srinivasa Raghavacharya at the Srinivasa Press Mysore" என்றுள்ளது, இந்த ஸ்ரீநிவாஸராகவாசாரியர் ஸ்வாமியை நான் நன்கு அறிவேன். இவர் பல வருடங்கள் பரகால மடத்தில் ஸ்ரீகார்ய துரந்தரராக இருந்து சில வருடங்களுக்கு முன்பு தான் பரமபதமெய்தினர். இவரும் சிறந்த வித்வான். இந்த யதிராஜ வைபவத்தை ஷை மடம் தனிப்புத்தகமாக அச்சிட்டிருக்கவில்லை; வடகலை ஸம்பிரதாயத்திற் கென்று கொள்ளப்பட்டிருக்கிற மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்று ஒன்று. அது த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமி இயற்றியதாக வடகலை ஸம்பிரதாயஸ்தர்களுடையவும் ஸ்ரீ பரகால மடத்தினுடையவும் கொள்கை. த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி ஷை மடத்தின் மூல புருஷருடைய மூன்றாவது பட்டஸ்தராகக் கொள்ளப்படுகிறார். தமக்கு முற்பட்ட ஸ்வாமி, வேதாந்த தேசிகருடைய திருவடிகளில் கேட்ட சரித்திரங்களை ஆறாயிரப்படியாக ஸாதித்திருந்ததாகவும், இவர்தாம் அதைச் சுருக்கி மூவாயிரப்படியாக ஸாதித்ததாகவும் எழுதப்பட்டிருக்கின்றது. இந்த மூவாயிரப்படி குருபரம் பராப்ரபாவம் வடகலை ஸம்பிரதாயஸ்தர்களால் தமிழ் லிபியிலும் தெலுங்கு லிபியிலும் பல பதிப்புகள் ஏற்றப்பட்டுள்ளது. கடைசியாகப் பரகால ஸ்வாமியால் மடத்திலிருந்து இரண்டாயிரம் ரூபா வரையில் செலவு செய்து மிகச் சிறந்த முறையில் அச்சிடுவிக்கப்பட்டது. 204 பக்கங்கள் கொண்டது. அதில் தான் மேலே விவரித்த வடுக நம்பியின் யதிராஜ வைபவம் சேர்க்கப்பட்டுள்ளது. ஷை மூவாயிரப்படி குரு பரம்பரையிலும் ஸ்ரீ ராமாநுஜர் வைபவம் விரிவாக எழுதப்பட்டிருப்பதே. அதில் வெள்ளை சாத்துப்படி விஷயமாகவுள்ள இதிஹாஸத்தைக் காணவேணும். அதில் பக்கம் 88, 89ல்—

> "கூரத்தாழ்வான் உடையவருடைய த்ரி தண்ட காஷாயாதிகளை தரித்துக்கொண்டு அந்த மநுஷ்யனோடே போக, பெரிய நம்பியும் கூட வெழுந்தருளினர். பின்பு நடாதூராழ்வான், முதலியாண்டான், திருக்குருகைப்பிரான் பிள்ளான் முதலானவர்கள் தேவரீர் இங்கிருக்க வொண்ணாதென்று உடையவருக்கு வெள்ளை சாத்தி மேல்நாட்டுக் கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போக"............

என்கிற வாக்யங்கள் கண்ணாடிபோல் விளங்குகின்றன. இந்த வெள்ளை சாத்துப்படி கதை தென்கலையார்களுடைய நூல்களில் கல்பிக்கப் பட்டதென்று எழுதுகிறார் S. N. ராமதேசிக னென்பவர். இவர் என்ன செய்திருக்க வேண்டுமென்றால், தென்கலையாருடைய நூல்களில் இந்த இதிஹாஸத்தைக் கண்டவுடனே 'இதேபோல் நமது வடகலை ஸம்பிரதாயத்திற்கும் ஸ்ரீ ராமாநுஜ சரித்திர நூல் அவசியம் இருக்குமே; அதில் இக்கதை உள்ளதா இல்லையா பார்ப்போம்' என்று அதை யெடுத்துப் பார்த்திருக்கவேண்டும். பாராமலிருப்பரா? பார்த்திருப்பர். தென்கலையாருடைய நூல்களைப் பார்த்தே அந்த த்ருதீய ப்ரம்மதந்த்ர ஸ்வாமியும் தவறாக எழுதிவிட்டாரென்று அவரையும் மனத்தினுள்ளேயே நிந்தித்திருப்பர். அந்த த்ருதீய ஸ்வாமியானவர் 500 வருடங்களுக்கு முற்பட்டவர். ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவமருளிச் செய்த பின்பழகிய பெருமாள் ஜீயர்க்கு 125—150 வருடம் பிற்பட்டவர். அந்த ஜீயரை இந்த யதி பிராமாணிகராகக் கொண்டே அவருடைய ஸ்ரீஸூக்தியைத் தழுவித் தாம் எழுதி யிருக்கவேண்டும். ஆக 500, 600 வருடங்களுக்கு முன்னமே இந்த வெள்ளை சாத்துப்படி வரலாறு பிரஸித்தமாயிருந்ததென்று தமிழ் நூல்களை மட்டுங்கொண்டு நிர்ணயிக்கக் குறையில்லை. வடமொழி நூல்களைக் கொண்டாலோ இது யதார்த்தமான சரித்திரமென்று தடஸ்தர்கள் கொள்ளத் தட்டில்லை. வடுக நம்பியின் யதிராஜ வைபவ நூலுக்கு ஏறக்குறைய ஸமகாலத்திலேயே அவ

தரித்தது கருடவாஹந பண்டிதருடைய திவ்யஸூரிசரித மஹாகாவ்யம். கருடவாஹந பண்டிதரும் வடுக நம்பியைப் போலவே ஸ்ரீராமாநுஜருடைய திருவடிகளிலே ஸாக்ஷாத்தாக ஆச்ரயித்திருந்தவர். ஸ்ரீ ரங்கநாதனுக்கு தந்வந்தரி கைங்கரியத்திலே ஸ்ரீ ராமாநுஜரால் நியமிக்கப் பட்டிருந்ததாகத் தாமே சொல்லிக் கொள்ளுகிறார். இவர் ஆழ்வார்களின் சரிதைகளை யெல்லாமெழுதி ஸ்ரீமந்நாத முனிகள் தொடங்கி ஆசாரியர்களின் வைபவங்களை யெழுதி வருகையில் ஸ்ரீ ராமாநுஜர் வைபவத்தைப் பூர்த்தி செய்யாமல் காவியத்தை முடித்திருப்பதனால் ஸ்ரீ ராமாநுஜருடைய திருவவதார ஸமாப்திக்குள்ளாகவே இவர் திருநாடு சென்றிருப்பர் போலுமென்று மஹான்கள் ஊஹிக்கிறார்கள். அதில் முடிவில் பதினெட்டாம் ஸர்க்கத்தில் (ச்லோகம் 74.)

"சோளஸ்ய ச்ருதிகடு சேஷ்டிதம் யதீந்த்ர: ச்ருத்வா அத ச்ரிதவிமலாம்பரஸ் ஸ ரங்காத் ஸ்ரீரங்கிந் அவ தவ தாம தர்சநஞ்ச இத்யுக்த்வா ப்ராஸ்தித விநிவேச்ய கூரநாதம்."

(இதன் பொருள் :) சோழனுடைய கடினமான செய்கையை எம்பெருமானார் கேள்விப்பட்டு வெள்ளைத் திருப்பரி வட்டம் சாத்திக்கொண்டு 'அழகிய மணவாளா! உன் கோயிலையும் தர்சனத்தையும் காத்தருள் என்று பிரார்த்தித்துவிட்டு ஆழ்வானை நிறுத்திவிட்டுத் தாம் கோயிலில் நின்றும் புறப்பட்டருளினார் என்பதாம்.

அதற்குமேல் எழுபத்தேழாம் சுலோகத்தில்,

"ஆநைஷீத் ந்ருபஸவிதம் மஹார்ஹபூர்ணம் ஸ்ரீரங்காத் ஸஹ யதிவேஷ கூரபர்த்ரா."

(யதிராஜ வேஷம் பூண்ட கூரத்தாழ்வானைப் பெரிய நம்பியுடனே ராஜ ஸபையில் கொண்டு சேர்த்தது ராஜஸைன்யம்) என்று சொல்லிற்று. ப்ரக்ருதம் இந்த சரித்திரத்தில் ஆக்ஷேபத்தைக் கிளப்பிய நண்பர்க்கு நாம் நான்கு அதாரிட்டிகள் காட்டினோம். தமிழில் இரண்டு, ஸம்ஸ்க்ருதத்தில் இரண்டு. தென்கலை ஸம்பிரதாயத்துக் குருபரம்பரா ப்ரபாவமும், வடகலை ஸம்பிரதாயத்துக் குருபரம்பரா ப்ரபாவமும், வடுகநம்பியின் யதிராஜ வைபவமும், கருடவாஹந பண்டிதரின் திவ்ய ஸூரிசரிதமுமாக. ஆனால் தமிழ் நூல்களைப்பற்றி இவர் எவ்விதமான அபிப்ராயம் கொண்டாலும் ச்லோக ரூபமான ஸம்ஸ்க்ருத நூல்களுக்கு இவர் மதிப்புக்கொடுத்தே யாகவேண்டும். அதிலும் ஸ்ரீ பரகால மடாதிபதி ஸ்வாமி வெளியிட்டவற்றுக்கு மிக்க மதிப்பு தரவேண்டும். அவற்றையும் கல்பிதமென்று கூற இவர் முன் வருவரேல் "இவர் ப்ரமாண பத்தரல்லாத வைதண்டிகர்" என்று கைகூப்பி நிற்பதே நமக்கு உற்றதாகும்.

புராதன இதிஹாஸங்களில் அல்ப புத்திகளான நமக்குப் பலவகையான ஆசங்கைகள் தோன்றக்கூடும். அந்த இதிஹாஸங்கள் பிராமாணிக க்ரந்தங்களில் ஏறியிருப்பவை யென்று தெரியவந்தால் அவற்றை ஆக்ஷேபிக்க நாம் நெஞ்சிலும் நினைக்கலாகாது. அப்ராமாணிக க்ரந்தங்களென்று நிர்த்தாரணம் செய்யப்பட்ட நூல்களில் காணும் கதைகளானால் அவற்றைப்பற்றி எவ்வளவும் ஆராய்ச்சி செய்யலாம். ஸ்ரீ ராமாயண மஹாபாரதாதி கதைகளில் ஒவ்வொன்றிலும் ஆக்ஷேபங்கள் கூறுகின்றவர்கள் இல்லையா? அவர்களை நாம் நாஸ்திகர்களென்று ஒதுக்குகிறோம். ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்களைப் பற்றின சரித்திரங்களில் அத்வைதிகள் போல்வார் ஆக்ஷேபம் கூறினால் அதில் வியப்பில்லை. ஸ்ரீ வைஷ்ணவப் பேராசிரியர்கள் காத்தருளிப் போற்றியருளும் நூல்களை வைணவர்களே இழித்துரைப்பது தகாது. வால்மீகியின் உத்தரராமாயணமே கல்பிதமென்று C. R. எழுதி விட்டார்.

ஸ்ரீராமாநுஜரோ கூரத்தாழ்வானோ நூல் வரம்பைக் கடவாத மஹாசாரியர்களென்பது உலகப் பிரசித்தம். அப்படிப்பட்ட அவதார புருஷர்கள் நூல் வரம்பைக் கடந்து நடந்துகொள்ள நேர்ந்ததென்றால் ஆபத்தின் கனமன்றோ ஊஹிக்கத் தக்க

தாகவுள்ளது. ஸ்ரீராமாயணத்தில் ஆரணிய காண்டத்தில் 46-ஆம் ஸர்க்கத்தில் இராவணன் யதிவேஷம் பூண்டு வந்ததாகச் சொல்லிற்று. அவன் வஞ்சகபுத்தியோடு வந்தவனாதலால் அஃது உற்றதே. கிஷ்கிந்தா காண்டம் மூன்றாவது ஸர்க்கத்தில் ராமலக்ஷ்மணர்களிடம் வந்த மாருதி யதிவேடம் பூண்டு வந்ததாகச் சொல்லிற்று. இந்த வேஷம் எதற்காகக் கொண்டது. இராவணனுக்குப் போலே வஞ்சக புத்தி இவர்க்குச் சிறிது மில்லையே. தம்மைப் பற்றி உள்ளது உள்ளவாறு சொல்லிக் கொண்டே வந்து பணிந்திருக்கிறார். முதலில் சடபுத்தி யுண்டாயிருந்தாலும் அதனால் யதிவேஷம் பூண அவசியமில்லையே யென்று வாதிக்கும் சிலர் இது ராமாயணத்தில் ப்ரக்ஷிப்தம் என்கிறார்களாம். அன்னவர்களில் இவரும் ஒருவராயிருக்கலாம்.

## — திருமந்திரத்தை வாரியிறைத்தவிஷயம் —

இனி அடுத்த விஷயத்திற் செல்வோம். ஸ்ரீராமாநுஜர் திருக்கோட்டியூரில் மந்த்ரத்தை அநதிகாரிகளுக்கு வாரியிறைத்தாரென்றுகொண்டு பழிப்பு; இதிலும் நல்ல தெளிவைப் பிறப்பிக்கிறோம். ஸ்ரீராமாநுஜர் திருமந்திரத்தை ஹரிஜனங்கள் பல பேருக்கு வாரியிறைத்தாரென்றதாகக் காட்டி நண்பர் ஹிண்டுவில் எழுதுகிறார். இதை நாம் கேள்விப்பட்டதில்லை; முன்னோர்களது நூல்களிலும் கண்டதில்லை. திருக்கோட்டியூர் நிகழ்ச்சியில் பலர் மாறுபடச் சொல்லி வருவதுண்டாதலால் அதைப்பற்றின தெளிவைப் பிறப்பிக்கிறோம். "ஸ்ரீ பட்டர் அருளிச் செய்த கோஷ்டீநாத ஸ்துதியான முக்தக ச்லோகங்களில் "கோஷ்டீ பூர்ண குருபஸத்திருசலோ யாம் சச்வதாஸேதிவாந்" என்பது ஒரு சுலோகம். இதனால் ஸ்ரீராமாநுஜர் திருக்கோட்டியூர் நம்பி பக்கலில் அர்த்த விசேஷம் கேட்கப் பலகால் திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளினமை ஸ்பஷ்டமாகிறது. இங்ஙனே பலகாலெழுந்தருளி மிகமிக அருமையாக நம்பியிடமிருந்து அர்த்த விசேஷங்கள் பெற்றாரென்பதில் யார்க்கும் விவாதமில்லை. அந்த அர்த்தத்தை ஆசார்ய நியமனத்தைக் கடந்து பலபேர்களுக்குச் சொல்லி விட்டாரென்று கொண்டு இது அஸங்கதமான வரலாறென்று சிலர் மறுப்பதுண்டு. இங்குத் தத்துவத்தைச் சுருக்கமாக வெழுதி முடிக்கிறேன். அடிக்கடி ராமாநுஜர் திருக்கோட்டியூருக்கெழுந்தருள்வது நம்பிபக்கலில் அர்த்த விசேஷம் பெறுவதற்காக என்று தெரிந்து கொண்ட அவ்வூர் விலக்ஷணாதிகாரிகள் சிலர் ஸ்வாமியிடம் விடைகொண்டு 'நம்பிகளிடமிருந்து அர்த்தம் கிடைப்பது தேவரீருக்கே இவ்வளவு அருமையாம்போது அடியோங்களுக்குக் கிடைக்க ப்ரஸக்தியே கிடையாது. ஒருகால் தேவரீருக்கு நிதி கிடைத்தால் அடியோங்களை உபேக்ஷித்தருளலாகாது.' என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். அன்னவர்களின் ச்ரத்தையையும் அபிநிவேசத்தையும் நோக்கி உகந்தருளின ஸ்வாமி நம்பிபக்கலில் தாம் அர்த்தம் பெற்ற பிறகு அவர்களை மட்டும் ஸௌம்ய நாராயணன் ஸன்னிதிமேல்தளத்திலே ஏகாந்தமான விடத்திலே கோஷ்டியாக இருக்க வைத்து உபதேசித்தருளினர். ஆசார்ய ஹ்ருதயத்தில் "தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடி பணிந்தவர்க்குமே இவையுள்ளது" என்ற (204) சூர்ணையின் வியாக்கியானத்தில் "பலகால் நடந்து துவண்டு கேட்ட பரமார்த்தத்தை ஓலக்கமாக வைத்து உபதேசித்தும்" என்பது மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி. ஓலக்கமாக வைத்து உபதேசிக்கை யென்பது கண்டவர்களுக்கும் வாரியிறைப்பதன்று. "பத்ரேக்ஷிதோ வா வ்யர்த்தஸ் ஸ்யாத் யத்ருச் சாச்ருத ஏவ வா" என்கிற பிரமாணம் ஸ்ரீராமாநுஜர் அறியாததன்று; அவர் வியர்த்தமான காரியத்தை ஒருகாலும் செய்யார். பணம் காசு பைஸாவாக இருந்தால் வீதியில் வாரி யிறைக்கலாம். வருவார் செல்வார் கைக்கொண்டு போகலாம். சிஷ்ய வ்ருத்தி செய்து ஆதரத்தோடு கேட்பார்க்கும் அரியவரிதான அர்த்த விசேஷத்தைத் தெருவில் போவார்க்கு வாரியிறைப்பதனால் என்ன பலனாகும்? அப்படி நடந்தது கிடையாது. மேலும் இங்கு முக்கியமான விஷயமொன்று. ஸ்ரீராமாநுஜர்

நம்பி பக்கலில் பெற்றது என்ன? ச்ரத்தாளுக்களுக்கு அவர் உபதேசித்தது என்ன? என்பதை உள்ளபடி தெரிந்து கொள்ளாதவர்கள் "திருமந்திரத்தைச் சொல்லி விட்டார்" என்பர்கள். தெலுங்கு நாடுகளில் "ராமாநுஜுலு கோபுரமெக்கி திருமந்த்ரம் செப்பினாரு" என்பதுண்டு. இதற்கெல்லாம் நாம் ப்ராமாண்யம் கொடுப்பவர்களல்லோம். கோபுரத்தில் யாதொன்றும் நடந்ததில்லை; திருமந்த்ரம் செப்பினதுமில்லை. பொதுவாக ரஹஸ்யார்த்தம் என்கிற விவக்ஷையில் திருமந்த்ரம் என்று சொல்லுவதானால் அதை யுக்தமென்று கொள்ளலாம். இனி அடுத்த விஷயத்திற் செல்வோம்.

**ஸ்ரீராமாநுஜருடைய ஸந்ந்யாஸ காரணம்.** ஸ்ரீராமாநுஜருடைய தேவியார்மேல் சில குற்றங்குறைகள் காணப்பட்டதனால் ஆச்ரம ஸ்வீகாரம் செய்து கொள்ளலாயிற்றென்று பிராமாணிக க்ரந்தங்களிலுள்ளது. அந்த குற்றங்கள் இன்னின்னவையென்றும் நிரூபிக்கப்பட்டுள்ளன. ஸ்வாமி ஸ்வாசார்யரான பெரிய நம்பிகளை ஸகுடும்பமாகக் காஞ்சீபுரத்தில் தமது திருமாளிகையி லெழுந்தருளப்பண்ணி வைத்து மிக்க பாரிப்புடன் அர்த்த விசேஷங்கள் கேட்டுக் கொண்டிருக்கையில் கிணற்றங் கரையில் தாம்புச் சண்டை யிட்டுப் பெரிய நம்பி தேவியாரை வெறுத்துரைத்தது காரணமாக நம்பிகள் ஸ்ரீராமாநுஜரோடு சொல்லாமலே தேவியாருடன் ஊருக்கு மீண்டெழுந்தருளும்படியானது முதற்குற்றம். திருக்கச்சிநம்பிகளிடத்தில் போனகஞ்செய்த சேடம் ஸ்வீகரிக்கவேணுமென்று ஸ்வாமி குதூஹலம்கொண்டிருக்கையில் அதை நிறைவேற வொட்டாமல் செய்தது இரண்டாங் குற்றம். பசித்து வந்த வொரு ஸ்ரீவைஷ்ணவர்க்கு ப்ரஸாதமிட நியமித்தருள, அவர்க்கு இல்லை யென்று சொல்லி உற்ற உறவினர்க்கு இட்டது மூன்றாவது குற்றம். இங்ஙனே மற்றுஞ்சில குற்றங்களுமிருக்கலாம். இவற்றுக்காக ஸ்ரீராமாநுஜருடைய திருவுள்ளம் புண்பட்டதென்றால் இதில் என்ன பிசகு? ஸந்ந்யாஸத்திற்கு ஹேது வைராக்யம். வைராக்யத்திற்கு ஹேதுக்கள் பல பல. ஸ்ரீராமாநுஜ தேவியாரிடத்தில் சர்யாதோஷம் யாரும் எழுதியிருக்கவில்லை. ஸ்வாமி திருவுள்ளத்திற்குப் பாங்கல்லாதபடி நடந்து கொண்ட குற்றத்தை நமது நண்பர் இல்லை செய்ய முன்வருவது எதற்காகவோ அறியோம்.

**— பாஷ்யம் ஸாதிக்கும்போது கூரத்தாழ்வான் திருத்தினாரென்பதுபற்றி —**

ஸ்வாமி ராமாநுஜர்க்கு முற்பட்டவரும் மஹாஜ்ஞான நிதியுமான ஆளவந்தார் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்யத் திருவுள்ளங் கொண்டிருந்தும் போதாயந வ்ருத்தி க்ரந்தத்தைக் கடாக்ஷித்து விட்டு எழுதவேணுமென்கிற விருப்பமிருந்தது. ஆனால் அவருடைய வாழ்நாளில் அந்த விருப்பம் நிறைவேறப் பெற்றிலது. காச்மீரத்தில் ஸரஸ்வதீ பண்டாரத்திலிருந்த அந்த வ்ருத்தியை ஸேவிக்க ஸ்ரீராமாநுஜர் கூரத்தாழ்வானுடன் அந்த தேசத்திற் கெழுந்தருளி மஹாதாப்ரயாஸேந ஸ்ரீ கோசத்தைப் பெற்று அரைகுறையாகவே ஸ்வாமி கடாக்ஷிக்க முடிந்தது. கூரத்தாழ்வான் இரவும் பகலுமாக வாசித்துப் பூர்த்திசெய்திருந்தார். ஸ்ரீகோசம் திடீரென்று வாங்கி உள்ளே சேமிக்கப்பட்டது. அப்போது பூர்த்தியாக ஸேவிக்க ப்ராப்தமாகவில்லையே யென்று ஸ்வாமி திருவுள்ளம்நொந்திருந்தார். கூரத்தாழ்வான் வ்ருத்தியைத் தரித்துக் கொண்டிருப்பதறிந்து உள்ளம் பூரித்தார். பிறகு ஸ்வஸ்தானம் சேர்ந்து ஸ்ரீபாஷ்யமிட்டருளத் தொடங்கும்போது ஆழ்வானைப் பட்டோலை கொள்ளும்படி நியமித்து "நீர் வ்ருத்தி க்ரந்தத்தைப் பூர்த்தியாகப் பார்த்தவராகையாலே நான் சொல்லி வருவது எங்கேனும் தவறுதலாக உமக்குத் தோன்றினால் அங்கு உத்போதனம் செய்யவேணும்" என்று கோரினார் ஸ்வாமி. ஆனால் ஆழ்வான் அதற்கு இசையவில்லை. திருத்திக் கொடுக்கவுமில்லை. திருத்திக் கொடுத்திருந்தால் அது ஆசார்யாஜ்ஞாநுவர்த்தனத்தில் சேருமேயன்றி அபசாரமாக வழியில்லை. ஸ்வாமி திருமாலையாண்டானிடம் திருவாய்மொழிப் பொருள் கேட்டபோது திருத்திக் கொடுத்தது அபலபிக்கமுடியாதபடியன்றோவுள்ளது. இதைப்பற்றி மேலே விரிவு காண்க.

எம்பார் தேவியாரை ஸந்நியாஸினி யாம்படி ஸ்வாமி அனுமதி தந்த ப்ரஸ்தாவம் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. இதைப்பற்றி இதற்குமேல் நாம் என்ன எழுதுவது?

## — ஆழ்வான் பரமபதித்தபோது ராமாநுஜர் அழுதாரென்பது —

பெரியாழ்வார் திருமொழியில் (3—8—4) "ஒரு மகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால், திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டு போனான்" என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் அருளிச் செய்திருப்ப தாவது, "ஆழ்வான் திருநாட்டுக் கெழுந்தருளினபோது உடையவர் விச்லேஷம் பொறுக்க மாட்டாமல் 'ஒருமகள் தன்னையுடையேன்' என்றும் 'உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்த்தேன்' என்றும் 'செங்கண்மால் தான் கொண்டு போனான்' என்றும் அருளிச் செய்தாரென்று ப்ரஸித்தமிறே' என்று. இப்பாசு ரத்தை யருளிச்செய்தாரென்னாதே பாசுரத்தை மூன்று கண்டமாகப் பிரித்து என்றும், என்றும், என்றும் அருளிச் செய்தாரென்றிருப்பதன் மருமமுணரவேணும்; பாசுரத்தைப் பூர்த்தியாகச் சொல்லமாட்டாமல் இடையிடையே நிறுத்தி விக்கின ரென்பது காட்டப்பட்டது. ஆழ்வான் பரமபதித்த செய்தியை குருபரம்பராப்ரபா வாதிகளில் ஸேவிக்கும்போது இற்றைக்கும் கல்நெஞ்சினரும் கண்ணீர் பெருக நிற்கின்றார்கள். மொழியைக் கடக்கும் பெரும்புகழாளரான ஆழ்வானுடைய வியோ கத்திலே எம்பெருமானார் எத்தனை விரக்தாக்ரேஸரரா யிருந்தாலும் சைதந்ய கார்ய மின்றிக்கே யொழிய எப்படி முடியும். *ஸமுத்ர இவ காம்பீர்யே* என்னப்பட்ட சக்ரவர்த்திதிருமகனும் ஸீதாவியோகத்திலே பட்டபாடுகளை யெழுதிவைத்த வான்மீகி முனிவர் ஒரு மஹா கவியினால் "வல்மீகஜந்ம முநீரேவ கடோரசேதா:" என்று பழிக்கப்பட்டார். "வைக்லப்யம் மம தாவத் ஈத்ருச மஹோ ஸ்நேஹாத் அரண் யௌகஸ:" என்று சகுந்தலைக்காக கண்வர் அழுதபடியன்றிது. இதில் என்ன ஏச்சோ! என்ன பேச்சோ! அறியோம்.

வண்ணான் கதையொன்று எடுத்துக் காட்டப்படுகிறது. இதனை யாமறியோம்.

முடிவுரை:—இந்த வியாஸம் பி. ஸ்ரீ. அவர்களுக்குப் பரிந்து எழுதினதன்று. அவர்கள் எழுதியுள்ளவற்றை யெல்லாம் இசைந்திடுவோ மல்லோம் நாம். பூர்வாசாரி யர்களது அரும்பெரு நூல்களில் அநவத்யமாகக் காணும் விஷயங்களை வீண்பிடி வாதத்தினால் மறுப்பவர்களை மறுக்கவேண்டியே இஃதெழுதினோம் நாம். பி. ஸ்ரீ. அவர்கள் தவறாக எழுதியிருந்தாலும் அதையும் நாம் நிர்தாக்ஷிண்யமாக மறுக்க முன்வருபவர்களே. ஹிண்டுவில் மறுப்புரை யெழுதியவர் பி. ஸ்ரீ. எழுதியவற்றைப் பிசகென்று நிரூபிக்க விரும்பினால் தாம் தகுந்த பிரமாண ஆதாரங்களைக் காட்டி மறுத்திருக்கவேண்டும். அதுதான் ருஜுவான மார்க்கம். அந்த வழியிற் செல்லாது "தென்கலையாருடைய நூல்களையே அடிப்படையாகக் கொண்டு பி. ஸ்ரீ. எழுதினா" ரென்று நண்பர் எழுதியிருப்பது தகுதியற்றது. தென்கலை ஸம்பிரதாய நூல்களை இவர் கிள்ளுக் கீரையாக நினைப்பது யுக்தமன்று. ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் தமது நூல்களில் பல பல ஐதிஹ்யங்கள் ஸாதித்திருப்பதுண்டு; அவையெல்லாம் தென்னா சாரிய ஸம்பிரதாய நூல்களிலிருந்தே அறிந்து எழுதப்பட்டவை யென்பதை விரிவுக்கு அஞ்சாமல் ஸப்ரமாணமாக நிரூபிக்கிறேன்; நிர்மத்ஸரர்கள் ஆழ்ந்து காணவேணும். ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தில் அவர் காட்டியுள்ள ஐதிஹ்யங்களை முன்னம் சுருக்கமாக வெடுத்துக் காட்டிவிட்டுப் பிறகு வேறு சில ஐதிஹ்யங்களையும் அவர் கையாண்டிருப்பதைக் காட்டுகின்றேன்.

(1) ஸ்ரீராமாநுஜர் தினப்படியாகத் தேவப்பெருமாளுக்கு சாலக்கிணற்றிலிருந்து திருமஞ்சனம் கொண்டு ஸமர்ப்பித்து வந்தாரென்கிற ஐதிஹ்யத்தைக் கண்ட சிலர்

"சதுச்சாஸ்த்ர பண்டிதரான ராமாநுஜர் அஸ்மதாதிகளைப் போலே தண்ணீர்க்குடம் சுமந்து வந்தாரென்றால் இது நம்பத் தகுமா?" என்கிறார்கள். ஸ்வாமி தேசிகன் யதிராஜ ஸப்ததியில் "தத்தம் யேந தயாஸுதாம்புநிதிநா பீத்வா விசுத்தம் பய: காலே ந: கரிசைலக்ருஷ்ணஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி" என்கிற சுலோகத்தில் இவ்விதிஹாஸத்தைப் பொறித்து வைத்தார். இது தென்னாசார்ய ஸம்பிரதாய நூல்களிலிருந்தே கிரஹிக்கப்பட்டதென்பதில் ஐயுறவேண்டா.

(2) யாதவப்ரகாசர் பிறகு ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தாரென்கிற இதிஹாஸமும் ஸப்ததியில் "ஸ்வபலாத் உத்த்ருத யாதவப்ரகாச:" என்பதனால் பொறிக்கப்பட்டது. இதை ஸ்ரீவைஷ்ணவர்களுங்கூட அனேகர் இசைவதில்லை. இதுவும் தேசிகரால் தென்னாசார்ய நூல்களிலிருந்தே கொள்ளப்பட்டது.

(3) ஸ்வாமி ராமாநுஜர் கிடாம்பியாச்சானைப் பாசகராகக் கொள்வதற்குமுன்பு பிக்ஷை செய்தருளுங் காலத்தில் திருப்பாவை யநுஸந்தானம் செய்து போந்தபடியினால் திருப்பாவை ஜீயரென்று திருநாமம் பெற்றாரென்னு மைதிஹ்யத்தை ஸப்ததியிலேயே "லிப்தே லக்ஷ்மண யோகிந: பதயுகம்" என்கிற சுலோகத்தில் பூர்வார்த்தத்திலிட்ட திருவடி விசேஷணத்தினாலும், உத்தரார்த்தத்திலிட்ட பூமி விசேஷணத்தினாலும் வெகு அற்புதமாகக் காட்டியருளினார். இதன் விவரணத்தை நாம் வடமொழியிலெழுதி வெளியிட்டுள்ள வேதாந்ததேசிக வைபவத்தின் அநுபந்தத்தில் நன்கு காணலாம். இதுவும் தென்னாசார்ய நூல்களிலிருந்தே தேசிகரால் கொள்ளப்பட்டது.

(4) ஸ்ரீராமாநுஜருடைய ஸம்பந்த ஸம்பந்த ஸம்பந்திகளுக்கெல்லாம் [ஸாக்ஷாத்பரம்பரா விபாகமின்றிக்கே] முக்தி ப்ராப்தியுண்டென்னு மர்த்தத்தை தேசிகன் தத்வ டீகையில் "விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே" என்ற விடத்து வியாக்கியானத்திலும், ந்யாஸதிலகத்தில் "உக்த்யா தநஞ்ஜய..............ச்ருத்வா வரம் தததநுபந்த மதாவலிப்தே நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத!" என்கிற சுலோகத்திலும் ஸ்பஷ்டமாகப் பொறித்துவைத்தார். இதுவும் தென்னாசார்ய நூல்களிலிருந்துதான் கொள்ளப்பட்டது.

(5) ஸ்ரீராமாநுஜர் திருமாலை யாண்டான் பாடே திருவாய்மொழிப் பொருள் கேட்டாரென்றும், திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்கள் சிக்ஷித்தாரென்றும், ஆளவந்தாராழ்வார் ஸ்ரீபாதத்திலே அருளிச் செயலும் நல்வார்த்தைகளும் அதிகரித்தாரென்றும்........குருபரம்பரா ஸாரத்திலே தேசிகர் எழுதி வைத்திருப்பதும் தென்னாசார்யஸம்பிரதாய நூல்களிலிருந்து க்ரஹித்துத்தானென்பதில் ஐயமுண்டோ?

(6) திருமாலையாண்டான் திருவடிகளில் பகவத்விஷய மதிகரிக்கும் நாளிலே ஸ்வாமி ராமாநுஜர் பலபல விடங்களில் இப்படி அர்த்தமானாலோவென்று ஸாதித்துத் தாம் வேறுவிதமாக நிர்வஹிப்பரென்றும், அப்போது ஆண்டான் 'இது விச்வாமித்ர ஸ்ருஷ்டி; ஆளவந்தாரருளிச்செய்ய நான் கேட்டதில்லை' என்று ஸாதிப்பரென்றும், அப்போது ஸ்வாமி ராமாநுஜர் 'த்ரோணாசார்யருக்கு ஏகலவ்யன்போலே ஆளவந்தார்க்கு நான்' என்று அருளிச்செய்வரென்றும் தென்னாசார்ய ஸம்பிரதாய நூல்களிலுள்ளது. இதை வடகலையார் ஏற்றுக் கொள்ளாததோடு பரிஹஸிப்பதுமுண்டு. ஸ்ரீ உவே. உத்தமூர் வீரராகவாசாரிய ரென்பவர் பரிஹஸித் தெழுதியிருக்கிறாரென்பதை அடுத்தபடியாக எடுத்துக்காட்டுவேன். இவ்வைதிஹ்யத்தை தேசிகர் கீதா பாஷ்யோபக்ரமத்திலுள்ள *யத்பதாம் போருஹ ச்லோக வியாக்யானத்தில் "த்ரோணாசார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹமித்ய பிப்ராயேண த்யாந சப்த": என்று ஸ்பஷ்டமாக எழுதிவைத்தார். இவ்வைதிஹ்யத்தை உத்தமூரார் பரிஹஸித்திருக்கிறாரென்று மேலே நான் எழுதியிருப்பதை இங்கு மூதலிக்கிறேன். திருவாய்மொழியில் * கேசவன் தமரில் * விட்டிலங்கு செஞ்சோதி யென்கிற பாசுரத்தின் ஈடு முப்பத்தாறாயிரப்படி அவதாரிகையில் காணும் ஸ்ரீஸூக்திகளிவை—

"திருமாலையாண்டானோடே எம்பெருமானார் திருவாய்மொழி கேட்டருளுகிறநாளிலே பாட்டுக்கள்தோறும் சில வார்த்தைகளருளிச்செய்து இது அர்த்தமானாலோ வென்றால் 'இது விச்வாமித்ரஸ்ருஷ்டி, ஆளவந்தாரருளிச் செய்யக் கேட்டறியேன்' என்று பணிக்குமா மாண்டான். ஆண்டான் 'இப்பாட்டுக்கு விச்வாமித்ர ஸ்ருஷ்டி வேண்டாவாயிருந்ததீ!' என்ன, இப்பாட்டுக்குத் தன் அவயவ ஸௌந்தர்யத்தாலே என்னைத் தனக்காக்கினான் என்றருளிச்செய்தருளினாராம். அதுவுங்கிடக்க பட்டரருளிச் செய்வதொன்றுண்டு; 'ஆழ்வாரையும் ஆழ்வார் பரிகரத்தையும் விஷயீகரித்து அத்தாலே திருமேனியிற் பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தைச் சொல்லுகிறது'' .......ஆக இவை ஈட்டு ஸ்ரீஸூக்திகள்.

இந்த ஸ்ரீஸூக்திகளின் தாற்பரியம் ஸாமான்ய ஜனங்கள் அவகாஹித்துக் கொள்ள முடியாததலால் நம்முடைய திவ்யார்த்த தீபிகையுரையில் மிகத் தெளிவாக விவரித்துரைக்கப்பட்டுள்ளது. அது நிற்க. நிர்திஷ்ட வ்யக்தி மேலே குறித்த ஈட்டு ஸ்ரீஸூக்திகளைப்பற்றி யெழுதியிருப்பவை பாரீர்;—

"இங்கோர் ஐதிஹ்ய மீட்டிலுள்ளது; திருமாலையாண்டான் பக்கல் எம்பெருமானார் திருவாய் மொழியின் பொருள் கேட்டு வரும்போது பாட்டுக்கள் தோறுமே இது அர்த்தமானாலோ? என்றவாறு விண்ணப்பம் செய்வராம்; அவரும் 'இது விச்வாமித்ரஸ்ருஷ்டி, ஆளவந்தாரருளிச் செய்யக் கேட்டறியேன்' என்பராம். அவ்வாண்டான் இங்கே 'இப்பாட்டுக்கு விச்வாமித்ரஸ்ருஷ்டி வேண்டுவதில்லை போதும்' என்றாராம். தன் ஸௌந்தர்யத்தாலே ஆழ்வாரைத் தனக்காக்கினது இங்கு கூறப்படுமென்று அங்கே அருளிச் செய்தது. இதில் ஆளவந்தார் அருளினதும் எம்பெருமானார் அருளினதும் ஒன்றே யாயிற்றென்பர் சிலர்; எம்பெருமான் மேவுந்தன்மையாக்கினதைக் கண்டு மகிழ்ந்து ஏத்துகிறாரென்று ஆளவந்தார் அருளினதாகவும், மேவச் செய்தது ஸௌந்தர்யத்தாலே யென்பதற்கு இப்பாசுரமென்று எம்பெருமானார் அருளினதாகவும் சிலர் கொள்வர். எந்த அழகைக் கொண்டு மேவச் செய்தானோ அவ் அழகை யெடுத்துரைக்கிறாரென்றால் எல்லாம் சொன்னதாம். ஆக எல்லா மொன்றே. இங்கே விச்வாமித்ர ஸ்ருஷ்டி எம்பெருமானாரை விட்டு பட்டரிடம் நின்றது. ஆண்டான் எழுந்தருளியிருந்தால் அருளி யிருப்பர்."
........................................என்பன.

இந்த வாக்ய ராசியில் 'என்பர் சிலர்; சிலர் கொள்வர்' என்பவற்றில் விவக்ஷிதமர்னதை அவராவது அறிந்து கொண்டிருப்பரா? என்பதை விவேகிகள் தாம் உணரவேணும். *ஸ்வயமபிலிகிதம் ஸ்வயம் நஜாநாதிக்கு இதுதான் ப்ரதமலக்ஷ்யம். இது எப்படியாவது கிடக்கட்டும்.

"இங்கே விச்வாமித்ர ஸ்ருஷ்டி எம்பெருமானாரை விட்டு பட்டரிடம் நின்றது." என்ற வார்த்தை விரலுக்குத் தகாத வீக்கமெனத் தகும். மேலே "ஆண்டான் எழுந்தருளி யிருந்தால் அருளியிருப்பர்" என்றதற்குத்தான் என்ன அர்த்தமோ? எம்பெருமானார் திருமாலையாண்டான் பக்கலில் திருவாய்மொழி கேட்டதில்லை யென்கிறாரா இவர்? அல்லது, திருவாய்மொழிப் பொருள் கேட்கும்போது இது விச்வாமித்ர ஸ்ருஷ்டியென்று ஆண்டான் சொல்லும்படியாக நடந்ததில்லை யென்கிறாரா? எதுவும் சொல்லப் போகாதிவர்க்கு. திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்டதை வேதாந்தவாசிரியர் குருபரம் பரா ஸாரத்தில் பொறித்து வைத்திருக்கையாலே அது சொல்லப் போகாது. ஆண்டான் விச்வாமித்ர ஸ்ருஷ்டியென்னும்படியாக வொன்றும் நடந்ததில்லை யென்னில், இதுவும் வேதாந்தாசார்ய ஸூக்தி விசேஷமறியாமையினாலத்தனை. அந்த ஸூக்தி விசேஷமாவது கீதாபாஷ்ய தாத்பர்ய

சந்திரிகை ஸாதிக்குமவர் *யத்பதாம்போருஹ ச்லோகத்தை விவரிக்குமிடத்துப் பணித்திருப்பதைக் கீழே (பக்கம் 11 (6)ல் காட்டினோம். அது ஐதிஹ்யத்தையுட் கொண்டது.

ஐதிஹ்ய மென்னென்னில்; பின்பழகிய பெருமா ளருளிச் செய்த ஆறாயிரப் படி குருபரம்பரா ப்ரபாவத்தில் எம்பெருமானார் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்கிற செய்தியை எழுதி வருமிடத்து,

"பின்னையும் திருவாய்மொழி தொடங்கி நடவாநிற்கச் செய்தே மீண்டும் ஓர் அர்த்த ப்ரஸ்தாவத்திலே ஆண்டான் ப்ரதிபாதித்த அர்த்தங் கேட்டு 'ஆளவந்தார் இப்படி யருளிச் செய்யார்' என்று உடையவர் விண்ணப்பஞ் செய்ய ஆண்டானும் நீர் ஆளவந்தாரைக் கண்ணிலும் காணுதிருக்க, இப்படி யருளிச்செய்யாரென்கை யாவ தென்? என்று கேட்டருள, உடையவரும், 'நான் ஆளவந்தாருக்கு ஏகலவ்ய னன்றோ' என்று விண்ணப்பஞ்செய்ய, ஆண்டானும் திருக்கோட்டியூர் நம்பி நமக்கு உரைத்தது ஒத்திருந்தது; இதுவும் ஒரு திருவவதாரம்; ஆளவந்தார் பக்கல் கேளாத அர்த்தமெல்லாம் இங்கே கேட்கப்பெற்றோம் என்று இவரைத் தெண்ட னிட்டருளினார்."

என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. இதுவும் ஒரு காலக்ஷேப க்ரந்தமாகையாலே தேசிகன் தாம் இதை குருமுகமாக க்ரஹித்தோ ஆப்தோபதேசத்தாலறிந்தோ இது விச்வஸநீயமான ஐதிஹ்யமென்று உலகுக்கு உணர்த்த வேண்டியே இதை ஸம்ஸ்க்ருதத்திலெழுதிவைத்தார். விச்வாமித்ர ஸ்ருஷ்டி ப்ரஸ்தாவ முண்டாகாதிருந்தால் "ஏகலவ்யோஹம்" என்று ஸ்வாமி ஸாதிக்க ப்ரஸக்தியேயில்லை. ஆக உத்தமூரவர் எழுதியிருப்பது வெறுக்கத்தக்கதென்று முடிந்தது.

இவருடைய அஸூயா பரீவாஹ வாக்ய ராசியில் "விச்வாமித்ர ஸ்ருஷ்டி எம் பெருமானாரை விட்டு பட்டரிடத்திலே சென்று சேர்ந்தது" என்றுள்ள பரிஹா ஸோக்திக்கு என்ன பொருள்? அநுபவ பரீவாஹ ரூபமான அருளிச் செயல்களில் ஆசார்யர்களின் திருவாக்கில் அர்த்த விசேஷங்கள் கரை கட்டாக் காவேரிபோலே வெள்ளங்கோத்து வருகின்றன. பட்டருடைய ரஸகனமான நிர்வாஹங்களில் ரஸிக்க பாக்யமற்றவர்கள் அர்த்தமற்ற பரிஹா ஸோக்திகளாலே நரகபாதேயம் சேமிப்பதென்னே? இந்த ப்ரகரணத்தில் இவர் கலிவியென்று ஏதோ எழுதுகிறார்; கல்வியா? கலவியா? கிழவியா? கொழுவியா? எந்தச் சொல் இவர்க்கு விவக்ஷித மென்று விளங்கவில்லை. இதெல்லாம் குருகுலஸேவா பாக்யதாரித்ரியத்தின் விளைவு என்பதில் ஐயமுண்டோ?

தமிழோடு ஸம்ஸ்க்ருதத்தோடு வாசியற எல்லாவற்றிலும் இவருடையது விபரீத வுணர்ச்சியே யென்பதற்கு ஒன்றே காட்டி நிற்போம். *வாமனன் பாசுரத் தின் அவதாரிகையில் *ந சக்ஷுஷா பச்யதி கச்சிதேநம்* என்று உபநிஷத் வாக்ய முதாஹரிக்கிறார். இது அப்ரஸித்தமானதோ ருபநிஷத்தி லுள்ளதன்று; ஓதி வருகிற நாராயணாநுவாகத்திலுள்ளது. "கச்சநைநம்* என்று பாடமே யல்லது கச்சிதேநம் என்பது கிடையாது. சித் - சந எப்படி யிருந்தாலென்ன? என்பர். ஸ்வர உச்சாரண வடிவத்தில் நெடுவாசி யுண்டாகும். முக்கியமாக ச்ருதி வாக்யத்தில் ஸ்வச்சந்த கல்பனை ப்ரத்யவாய ஹேதுவாகும். எதற்கும் அஞ்சாதே வாகர்த்தங் களிரண்டையும் படுகொலை யடிப்பது தவிர்ந்து உய்யும் வகை காண நினைக்க வேணும். ப்ராஸங்கிகமானவிது நிற்க.

(7) ஸ்ரீராமாநுஜர்க்கு முற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருமுடி ஸம்பந் தத்தினாலும், பிற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினாலும் உத் தீர்ணரானார்கள் என்கிற ஐதிஹ்யம் தென்னாசார்ய ஸம்பிரதாய நூல்களிலுள்ளது. இதை வடகலையார் அஸங்கதமென்று சொல்லி வருகிறார்கள். தேசிகன் இவ்வைதிஹ்

யத்தை ந்யாயபரிசுத்தியின் உபக்ரமத்திலிட்ட "பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்யமாநவிபவாந் ......" என்கிற சுலோகத்தில் பொறித்து வைத்தார். இதுவும் தென்னாசார்ய நூல்களிலிருந்தே கொள்ளப்பட்டது. இதைப்பற்றிச் சிறிது விரிவாக எழுதவேண்டி யிருக்கிறது. நமது 'தானே யெழுதிய தன்சரிதையில் (பக்கம் 91ல்) கூரத்தில் நிகழ்ந்ததொரு நிகழ்ச்சி என்ற தலைப்பின்கீழ் எழுதப்பட்டுள்ளவிது ஏற்கெனவே உலகம் பரவியுள்ளது. இங்கும் சுருக்கமாகத் தெரிவிக்கலாகிறது. காஞ்சீபுரியில் ஸ்ரீஉவே. அய்யா. க்ருஷ்ணஸாமி தாதாசாரிய ரென்பவரை [வைகுண்டவாஸியை]ப் பலருமறிவர். இவர் ஸம்ப்ரதாய நிஷ்ணுதர். இவர் ஒரு ஸமயம் கூரத்தாழ்வான் திருநக்ஷத்ரோத்ஸவம் ஸேவிக்க அவருடைய திருவவதாரஸ்தலமான கூரத்திற்குச் சென்றிருந்தார். அங்குள்ள ஸ்வாமிகள் இவருடைய வருகைக்கு உகந்து ஏதாவது உபந்யாஸம் ஸாதிக்கவேணுமென்று வேண்டிக் கொண்டார்களாம். அங்கே பல ப்ரகரணங்களில் "அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வ மாச்ரித்ய, பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபுஃ, ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாத் அமநுத கதம் வர்ண்யதே கூரநாதஃ" என்கிற ச்லோக ரத்னம் (பட்டர் அருளிச் செய்தது) அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. அதைக் கேட்டிருந்த இந்த தாதாசாரியர் அதைத் தம்முடைய உபந்யாஸத்திற்கு விஷயமாகக் கொண்டு

"இந்த ச்லோகத்தில் சொல்லுவதென்ன வென்றால் எம்பெருமானாருடைய திருமுடி ஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசாரியர்கள் உஜ்ஜீவித்தார்களென்றும், பிற்பட்ட ஆசாரியர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினால் உஜ்ஜீவித்தார்களென்றும் சொல்லுகிறது. இது தப்பான ஐதிஹ்யத்தைக் கொண்டு கல்பிக்கப்பட்ட சுலோகமே யொழிய புராதனச்லோகமன்று. பிற்பட்டவர்களுக்கு பாஷ்யகாரருடைய திருவடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமென்றால் இது பொருந்தும். இதில் ஆக்ஷேபமுதிக்க வழியில்லை. முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினால் மோக்ஷ முண்டாயிற்றென்றால் இது அநந்விதமான வார்த்தையல்லவா? இது எப்படி பொருந்தும்? ஸ்ரீமந்நாத முனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி போல்வார்தானே பாஷ்யகாரர்க்கு முற்பட்டவர்கள். அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச் சேர்ந்தவர்களன்றோ? அவர்கள் காலத்தில் பாஷ்யகாரர் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருவடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு; இவருடைய அவதாரமே நடந்திலாத ஸமயத்தில் இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமான வார்த்தை. நீங்கள் இங்கே சொல்லி வருகிற சுலோகம் தப்பான ஐதிஹ்யத்தையே உட்கொண்டது. இதை அநுஸந்திப்பது இனி வேண்டாவென்று வேண்டுகிறேன்."

என்று அரைமணி காலம் உபந்யஸித்து அங்குள்ள யதாச்ருத க்ராஹிகளான ஸ்ரீவைஷ்ணவர்களின் மனத்தை மிகவும் குழப்பிவிட்டார். இது காலை 11 மணிக்கு அங்கு நடந்தது. அங்குள்ளார் உடனே அடியேனுக்குச் செய்தி தெரிவித்து உடனே இவ்விடம் வந்து சேரவேணு மென்று கோரினார்கள். விஷயத்தையும் தெரிவித்திருந்தார்கள். உடனே நான் ந்யாய பரிசுத்தி ஸ்ரீகோசத்துடன் புறப்பட்டு மாலை 4 மணிக்கு அவ்விடம் சென்று சேர்ந்தேன்.

அந்த ந்யாய பரிசுத்தியில் தேசிகன் எம்பெருமானாரைப் பற்றிப் பணித்த மங்கள ச்லோகத்தில் [பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாதகோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்யமாநவிபவாந் தந்யாந் ததாந்யாந் குரூந்] என்றுள்ளது. இதன் பொருளாவது, ஸம்யமிநாம் பத்யு: சரணௌ ப்ரணம்ய—; தத்பாத கோடீரயோ: ஸம்பந்தேந—அந்த எம்பெருமானாருடைய திருவடியென்ன திருமுடி

யென்ன இவற்றினுடைய ஸம்பந்தத்தினல், ஸமித்யமாநவிபவாந்—பெருமை பெற்ற வர்களாய், தந்யாந்—க்ருதார்த்தர்களான, குரூந் ப்ரணம்ய—ஆசாரியர்களை வணங்கி யும் .......ந்யாயபரிசுத்தி யென்கிற இந்த க்ரந்தம் செய்யப்படுகிறது என்கை. இதில் "தத் பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந" என்றது உயிரான வார்த்தை. கோடீர மென்று திருமுடிக்குப் பெயர். பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் போல முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தம் உத்தாரகமென்று இதனல் நன்கு காட்டப் பட்டதாயிற்று. இந்த ச்லோகமானது "அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வ மாச்ரித்ய" என்கிற ஆழ்வான் தனியனை யடியொற்றியே தேசிகன் பணித்தது. "[யச்சோபயோஸ் ஸமோ தோஷ: பரிஹாரோபி வா ஸம:" இத்யாதிஎன்று பரக்கவுபந்யஸித்தேன். அவர் இவை முழுதும் கேட்டு இதற்குமேல் ஒன்றும் சொல்ல வழி யில்லாமையாலே 'இப்படியன்றோ விஷயஞ் சொல்லவேணும்' என்று கொண் டாடிவிட்டு அப்போது ஸாரமாகவும் ரஸமாகவும் சில வார்த்தை சொன்னர்; "ஒரு க்ஷணத்தில் தேசிகனுடைய ஸ்ரீஸூக்தியைக் கொண்டே என்னை வாய்மாளப் பண்ணின ஏற்றம் இந்த அண்ணஸ்வாமி யொருவர்க்குத்தான் ஏற்கும். மற்ற பேர்கள் ஏதாவது கதை சொல்லிக்கொண்டிருப்பார்களே யொழிய இப்படி ச்ருங்க க்ராஹிகயா ப்ரமாணமெடுத்துக்காட்ட, அதிலும் தேசிக ஸூக்தியையே யெடுத்துக் காட்ட சக்தரல்லர். எங்களுடையவர்கள் எதையும் ஆழ்ந்து பாராமல் "விததைதிஹ்ய ஸஹஸ்ரவர்ணநேந" என்று உபாலம்பம் செய்து போனர்கள். வாயெடுத்ததற் கெல்லாம் பின்புள்ளாரான எங்கடவர்கள் அதையே சொல்லி வருகிறர்கள். நானும் தப்பான ஐதிஹ்யமென்றே கருதிப் பல பேசிவிட்டேன், ஆழ்வானே க்ஷமித்தருள வேணும்" என்று.

(8) நாற்பதைம்பது வருடங்களுக்கு முன்பிருந்தவொரு வடகலை வித்வான் காஞ்சீபுரத்தில் ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் தையில் மகத்தன்று கண்டருளும் பைந்நாகம் பாய்சுருட்டி யுத்ஸவத்தைப் பழித்துக் கொண்டிருந்தார். அசல மூர்த்தி யான அர்ச்சாவதாரப் பெருமாள் திருமழிசைப்பிரானைப் பின்சென்று தானும் எழுந்து போனரென்றும், அவர் மீண்டவாறே தானும் மீண்டாரென்றும் கதை சொல்லுவதும், அதை ஒரு உத்ஸவமாக நடத்திக் காட்டுவதும் பரிஹாஸ்யமென்று பழித்துக் கொண்டிருந்தார். இவ்வைதிஹ்யமும் இதுபோன்ற பல ஐதிஹ்யங்களும் தென்கலையாரால் கட்டிவைக்கப் பட்டவையென்றும், விச்வகுணதர்சகாரர் "விததை திஹ்ய ஸஹஸ்ரவர்ணநேந" என்று இதைக் கல்வெட்டு செய்திருக்கிறரென்றும் வாய்வந்தபடி சொல்லிக் கொண்டிருந்தார். தேசிகர் ஸாதித்த வேகாஸேது ஸ்தோத்ரமென்கிற ஸ்ரீயதோக்தகாரி ஸ்தோத்ரத்தில் ஆறும் சுலோகத்தில் இவ் வைதிஹ்யம் வெகு சமத்காரமாக அநுஸந்திக்கப் பட்டுள்ளது காணும் என்று காட்டியுங்கூட "அஸங்கதமான ஐதிஹ்யத்தை யார் எழுதிவைத்தால் தானென்ன? தேசிகனுக்கும் தென்கலையாருடைய நூல்களில் கொஞ்சம் ப்ரமமுண்டு; அதனல் அவர் ஏதேதோ எழுதிவைக்கிறர். அசலமூர்த்தி எப்படி வெளிக்கிளம்ப முடியு மென்பதை ஆலோசியாமல் யார் எழுதிவைத்தாலென்ன? என்று சொல்லிக் கொண்டே அவர் காலத்தைக் கழித்தார். அவர் தொலையட்டும்; இவ்வைதிஹ்யத்தை தேசிகர் பொறித்து வைத்திருக்குமழகைக் காணீர்; "ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம் பக்தாநுகந்துரிஹ யஸ்ய கதாகதாநி" என்பது. இதன் கருத்தாவது, யதோக்தகாரி யெம்பெருமான் பக்தனைப் பின்சென்று, போவதும் வருவதுமான ஸஞ்சாரம் செய்தருளினபடியை யநுஸந்தித்தால் அஸ்மதாதிகளுக்கு ஸம்ஸார காந்தாரத்தில் நேரும் போவது வருவதான ஸஞ்சாரம் தொலையுமென்கை. மஹா மேதாவிகளான பூருவர்களுக்குத் தோன்றாத அநுபபத்திகளன்றோ இக்காலத்து விமர்சகர்களுக்குத் தோன்றுகின்றன. தென்னசார்ய ஸம்பிரதாய நூல்களைத்தான் தேசிகர் தஞ்சமாகப் பற்றினரென்பது சிலாசாஸனமே.

(9) நாற்பது வருடங்களுக்குமுன் திருவுள்ளூரில் வாழ்ந்த திவான்பஹாதூர் T.T. ரங்காசாரியரென்னும் பெரியார் வேதாந்த தீபிகைக்கு ஆசிரியராயிருந்த காலத்தில்சில நவீன ஆராய்ச்சிகளில் இறங்கி, ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் வழங்கும் ஐதிஹ்யங்களை ஆராயப் புகுந்து விப்ரதிபத்திகள் செய்யத் தொடங்கினர்; முந்துறமுன்னம் திருமங்கையாழ்வார் சரித்திரத்தை விமர்சிக்கப் புகுந்து அவ்வாழ்வார் நாகப்பட்டினத்தில் ஸ்வர்ணமயமாயிருந்த ஜைந பௌத்த விக்ரஹங்களை ஹரித்துக் கொண்டுவந்து ஸ்ரீரங்க பிராகார மண்டபாதி நிர்மாண கைங்கர்யத்தில் உபயோகித்தார் என்று குருபரம்பராப்ரபாவத்தில் எழுதப்பட்டுள்ள சரித்திரத்தை யெடுத்துக்கொண்டு "இது மிகவும் அநீதியான வரலாறு; ப்ராமாணிகர்களாய் யோக்யர்களாய்ப் பரம பக்தர்களான ஆழ்வார்கள் இப்படி அநீதியான செயல்களைச் செய்தார்களென்று எழுதிவைப்பது நமது பரம பாவனமான மதத்திற்கு இழுக்காகும்" என்று விபுலமாக எழுதி வேதாந்ததீபிகையில் பிரசுரமும் செய்துவிட்டார். அப்போது அதைக் கண்ட நாம் 'ஒரு ப்ரதிஷ்டிதரான மஹான் இப்படி ஸஹஸா எழுதிவிட்டாரே!' என்று மிக வருந்தி அவருக்கு அந்தரங்கமாக வொரு விண்ணப்ப மெழுதலானோம். (அதாவது) வெறுந் தமிழ் வசன நூற்களில் மட்டும் காணும் ஐதிஹ்யங்களில் தேவரீர்கள் எவ்விதமாக ஆராய்ச்சி செய்தாலும் செய்க. கூரத்தாழ்வான், பட்டர், வேதாந்த தேசிகன் போன்ற பூருவாசாரியர்களின் ச்லோகபத்தங்களாய் ஸர்வ ஸம்ப்ரதிபந்நங்களான திவ்யஸூக்திகளினால் நிர்விவாதமாக ஏற்படுகிற ஐதிஹ்யங்களிலும் விவாதப்படுவதும், ஹாஹாகாரம் செய்வதும் தேவரீரைப் போன்ற ஆஸ்திகர்களுக்குத் தகுமா? பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில், *ஜிதபாஹ்ய ஜிநாதிமணி ப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணந் விததே பரகால கவி: ப்ரணமேமஹி தாந்* என்கிற ச்லோக ரத்நத்தில் நிஸ்ஸந்தேஹமாகப் பொறித்து வைத்த திருமங்கையாழ்வார் சரித்திரத்தை தேவரீர் அநியாயக் கதையென்று எழுதிவிட்டால் இதை ஸ்ரீ வைஷ்ணவ வுலகம் ஏற்குமா? அந்த ச்லோகம் பிற்காலத்தவர்களால் கல்பிக்கப்பட்டு பட்டர் ஸ்ரீஸூக்திமத்யே புகுத்தப்பட்டதென்று தேவரீர் திருவுள்ளமா? இவ்வளவு கம்பீரமான ச்லோகம் பட்டர் தவிர வேறொரு வ்யக்தியால் நிருமிக்க முடியுமா? ஏறக்குறைய ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு அவதரித்த இந்த ச்லோகத்தைக் காற்கடைக்கொண்டு, நெஞ்சில் தோன்றினதை எழுதி வெளியிட்டுவிடுவது யுக்தமாகுமா?.......... இத்யாதிகள் விஜ்ஞாபனம் செய்திருந்தோம். உண்மையில் அவர் பரமாஸ்திகராகையாலே அந்த பட்டர் ஸ்ரீஸூக்தியிலே அத்யந்த ப்ராவண்யங்கொண்டு தாம் அவசரப்பட்டு எழுதினதற்கு மஹத்தான அநுதாபமுங் கொண்டு நமக்கு பதில் எழுதினர்—"ஸ்காலித்யே சாஸிதாரம்" என்ற முறையை தேவரீர் கைக்கொண்டு சிக்ஷித்ததற்கு மிகவும் க்ருதஜ்ஞனாகிறேன் இத்யாதி. நேரிலும் காஞ்சிக்கு வந்து நன்றி பாராட்டினர்.

இது நிகழ்ந்து நாற்பது ஐம்பது வருஷங்களுக்கு மேலாகிறது. நம்முடைய கடிதத்திற்குப் பிறகு அந்த மஹான் வேதாந்த தீபிகையில் என்ன எழுதினரென்பது நினைவில்லை. அதுநிற்க. இங்ஙனே பல ஐதிஹ்யங்கள் நம் பூர்வாசார்யர்களின் ச்லோக ரூபங்களான ஸ்ரீஸூக்திகளில் திகழ்கின்றன. அவற்றைப் பாராமலே பலர் 'அந்த ஐதிஹ்யம் தவறு. இந்த ஐதிஹ்யம் புளுகு' என்றிப்படி ப்ரஸங்க மேடைகளிற் பேசப் புறப்பட்டு விடுகிறார்கள். எழுதியும் வைக்கிறார்கள். இந்த ப்ரஸங்கங்களெல்லாம் நம்முடைய வாழ்நாளிலேயே வெளிவந்து மடிகின்றனவென்பது பற்றி உகந்து இக் கட்டுரை முடிக்கப்பெறுகின்றது.

ஸ்ரீகாஞ்சீ அண்ணங்கராசாரியரெழுதிய

**ஸ்ரீராமாநுஜ சரித்திர தத்துவம்**

முற்றிற்று.

# அடியேனது வெளியூர்ச் செய்திகள் P.B.A.

**அன்பு நிரம்பிய மனமுடைய நண்பர்கட்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.**

திருவரங்கம் பெரிய கோயிலில் நடைபெறும் பகல்பத்து இராப்பத்து என்னும் திருவத்யயன மஹோத்ஸவத்தை அடியேன் இளமையில் பல வருஷங்கள் ஸேவித்துப் பரமானந்தமெய்தினவன். பெரும்பாலும் ஆண்டுதோறும் சென்று ஸேவிப்பவனென்று கொள்ளலாம். ஸ்வஸ்தானத்தில் தேவப் பெருமாள் ஸன்னிதியில் இம்மஹோத்ஸவம் யதாக்ரமமாக நடைபெறுவது இருபத்தைந்து வருடமாகத்தானே. அதற்குமுன் அருளிச்செயல் ஸேவைமட்டும் நடக்குமேயன்றி ஆழ்வாராசாரியர்கள் எழுந்தருளி நடைபெறுவதில்லையே. அதனால் அந்த ஸமய விசேஷத்தில் நம்பெருமாள் ஸன்னிதியிற் சென்று ஸேவித்துக் குறைதீர்வது வழக்கமாயிருந்தது. 1930-வது வருடத்திற்குமேல் சென்னைமாநகரில் பிரவசன நிர்ப்பந்தம் விளைந்தபடியால் அந்த மஹாபாக்யத்தை இழக்க நேர்ந்தது. ஆயினும் சில வருஷங்களில் இத்திருவத்யயன மஹோத்ஸவம் கார்த்திகை மாதத்திலும் நடைபெறுவதுண்டாதலால் அங்ஙனம் நேரும் ஸம்வத்ஸரங்களில் நியமேந கோயில் விடைகொண்டு ஸேவிப்பதுண்டு. இவ்வாண்டில் பகல்பத்து முழுவதும் கார்த்திகை மாதத்திலேயே நிகழ்வது தெரிந்ததுமுதல் நாடோறும் "**அபீதாநீம் ஸ காலஸ் ஸ்யாத்**" என்றும் "குறுக்கும் வகையுண்டு கொலோ கொடியேற்கே" என்றும் பாரித்துக்கிடந்தேன். கார்த்திகை அமாவாஸ்யையன்றே புறப்பட்டுக் கோயில் விடைகொண்டு பரிபூர்ணாநுபவம்பண்ணி ஸ்ரீ வைகுண்டகத்யத்தில் "அம்ருத ஸாகராந்தர் நிமக்ந ஸர்வாவயவஸ் ஸுகமாஸீத" என்று ஸ்வாமியருளிச் செய்தபடியும், "இங்கே காண இப்பிறப்பே மகிழ்வரெல்லியுங் காலையே" என்று ஆழ்வாரருளிச் செய்தபடியும் பேரின்ப வெள்ளத்திலாழ்ந்திருந்தபடியை என் சொல்லவல்லே னென்வாய்கொண்டே; என்னெழுதவல்லே னென்கைகொண்டே? "அணியரங்கன் திருமுற்றத்தடியார் தங்கள் இன்பமிகு பெருங்குழுவுகண்டு யானுமிசைந்துடனேயென்று கொலோ இருக்குநாளே" என்று பாரித்து அநுபவித்த ஸ்ரீ குலசேகராழ்வாருடைய ஆனந்தமும் இதனில் குறைந்திருக்குமென்று நினைக்கும் செருக்குடையேனாயினேன்.

கோயிலில் பகல்பத்து அநுபவத்தின் துறைகள் ஒன்றிரண்டல்ல. காலை 7 மணி முதல் இரவு 10 மணி வரையில் இடையறாது அநுபவிக்கும் வகைகள் உண்டென்பதை அநுபவரஸிகர்கள்தாம் அறிவார்கள். இவற்றுள் முக்கியமான அநுபவ லக்ஷ்யம் அரையர் ஸேவை ஒன்றேயாகும். அடியேன் முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பும், அதன் பிறகு இடையிடையிலும் ஸேவிக்கப்பெற்ற காலங்களில் அரையர்கள் மூவர் நால்வர்க்கு மேல் ஸேவிக்கக் காணும் பாக்கியம் பெற்றதில்லை. நால்வரென்பதும் மிகை. மூவர்தாம் ஸேவிக்கக்கண்டது. இவ்வருஷம் எழுவர் ஸேவிக்கக்கண்ட காட்சி கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது. தற்காலம் தலைமைபெற்று விளங்குமரையர் ஸ்ரீ உவே, சடகோபா

சாரியர் ஸ்வாமி. அவர் தமது திருக்குமாரர்கள் நால்வரையும் *தம்மையே யொக்கவருள் செய்வரென்னுங் கணக்கிலே தம்மைப் போலவே பழக்கி வருவது விசேஷித்துக் குறிப்பிடத்தக்கது. அவருடைய மூத்த திருக்குமாரர் ஸ்ரீமந் நாத முனியென்பவர் விளக்கில் கொளுத்தின தீவட்டியாக விளங்குகிறார் "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்த தாமபிவர்த்ததாம்" என்று நிச்சலும் உலகமெல்லாம் போற்றி வருகையாலே அந்த திவ்யாஜ்ஞை ஒவ்வொருதுறையிலும் மழுங்காது மறையாது மாசூணாது செங்கோல் செலுத்திவருமழகு கண்ணெச்சில் படாமே பொலிக பொலிக பொலிகவென்று போற்றாதாரில்லை. இத்தலத்தில் அரையர்களுக்கு ஏற்பட்டிருக்கும் மரியாதைகள் அபரிமிதம். ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி முதலான விடங்களிலுள்ள அரையர்களுக்கு மில்லாத அங்யாத்ருசமான மரியாதைகள் இத்தலத்து அரையர்களுக்கு அமைந்துள்ளனவென்றால் இது ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரபாவமத்தனையொழிய வேறில்லை.

அடியேன் இளமையில் ஸேவித்த காலங்களில் கோஷ்டியில் ச்ரோதாக்களாக வீற்றிருக்கும் ஸ்வாமிகள் மிகச் சிலரேயிருப்பர். சில வருஷகாலமாக ஸ்தலத்து ஆசார்ய புருஷர்கள் அனைவரும், மற்றும் வ்யபதிஷ்டர்களான மஹான்களும் கோஷ்டி முடியுமளவும் வீற்றிருந்து அநுபவிப்பதை விரதமாகக் கொண்டிருக்குமழகு அற்புதமானது. இவையெல்லாவற்றுக்கும் சிகரமானதோர் அதிசயத்தையும் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். கோதாவரீ ப்ராந்தத்தில் அவதரித்து உபயவேதாந்த ப்ரவர்த்தகராய் உத்தமாச்ரமியுமான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமிகளை அறியாதாரில்லை. இந்த மஹா ஸ்வாமி மூன்று நான்கு மாதங்களாய் கோயிலில் எழுந்தருளியிருந்து, நேற்று ஐப்பசி மாதத்தில் அங்கு 10 நாள் பகவத் விஷயோத்ஸவம் (அல்லது) ஈடு மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடத்தி ஸ்ரீராம மஹாக்ரதுவும் நிகழ்த்தி, தென் திருக்காவேரி அம்மாமண்டப ஸமீபத்தில் விலக்ஷணமானதொரு ஸ்தலத்தில் க்ரதுஸ்தம்ப ப்ரதிஷ்டையும் செய்து புகழ்பெற்றது உலகப்பிரசித்தம். இந்த ஸ்வாமி திருவத்யயனோத்ஸவத்திற்கும் பூர்த்தியாக எழுந்தருளியிருந்து கோஷ்டியை இடையறாது அலங்கரித்தது மிகப் பெரிய விசேஷம். இந்த ஸ்வாமியுடன் ஸ்ரீமத் ஸம்பத்குமார ஜீயர் ஸ்வாமியென்று மற்றொருத்தமாச்ரமியு மெழுந்தருளியிருந்தார். ஸ்ரீ ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஸ்வாமியும் இவ்விரு ஜீயர் ஸ்வாமிகளுமாக மூவர் கோஷ்டியை அலங்கரித்திருந்தது "சிற்றெயிற்று முற்றல்மூங்கில் மூன்றுதண்டரொன்றினர், அற்றபற்றர் சுற்றிவாழும் அந்தணீரரங்கமே" என்ற திருமழிசையார் பாசுரத்தை நினைப்பூட்டியது.

**இங்கே ப்ராஸங்கிகமானதொரு விண்ணப்பம்:** மேலே பிரஸ்தாவித்த ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமி பூர்வாச்ரமத்திலிருந்தே ஏறக்குறைய முப்பத்தைந்து ஸம்வத்ஸரமாக அடியேனுக்கு அத்யந்தபரிசிதர். வெகுகாலமாகவே இவர் நமது விசிஷ்டாத்வைத மதப்ரசாரத்தில் அத்விதீயமான தீக்ஷை கொண்டவர். இவருடைய பிரசாரம் பரமவிலக்ஷணமானது. பத்து ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ வானமாமலை ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ஸந்நிதியில் உத்தமாச்ரம ஸ்வீகாரம்பெற்று அந்த முஹூர்த்த விசேஷத்தின் பலனாக அப்ரமேய அதிமாநுஷக்ருத்யங்களை நாடு நகரமும் நன்கறிய நடத்தியருளாநின்றார். இந்த ஸ்வாமி திருவத்யயனோத்ஸவ ஸமயத்தில் கோயிலில் எழுந்தருளியிருந்தபடியால் பகல்பத்து மஹோத்ஸவத்தில் தினந்தோறும் தம்முடைய

நேர்ந்தது. உரிய சிகிச்சையினால் ஒருவாறு ஸ்வாஸ்த்யமடைந்து *கீசுகீசு முதலிட்டுச் சில நாட்களில் இரண்டு பாசுரமாகவுமுரைத்துப் பதினான்கு நாட்களில் ஒருவாறு தலைக்கட்டப்பெற்றது.

ஸக்ரமமாக இடையறாது அநுபவிக்கமுடியாமற் போயிற்றேயென்கிற வருத்தம் ஒருபுறமிருக்க, வைதிக லௌகிக ப்ரக்ரியையாலே இரண்டுவகை யானந்தங்கள் அனுபவிக்க ப்ராப்தமாயின. (1) கீழே ஸ்ரீரங்க ப்ரஸ்தாவத்தில் ப்ரஸ்துதரான ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஸ்ரீமந் நாராயண ஜீயங்கார் ஸ்வாமிகள் தம்மோடுகூடவிருந்த ஸ்ரீமத் ஸம்பத்குமார ஜீயர் ஸ்வாமியோடுங்கூட (கீசுகீசு முதலாக) ஒருவேளைகூடத் தவறாமல் ஆதியோடந்தமாக உபந்யாஸ கோஷ்டியை அலங்கரித்தெழுந்தருளியிருந்தது அலப்ய லாபமான—அநந்ய ஸாமாந்யமான ஆனந்தம். ஆனந்தம் என்கிற சொல்லும் ப்ரஹ்மானந்தமென்கிற சொல்லும் போதாது. தனிப்பட்டவொரு சொல் அபூர்வமாக ஸ்ருஷ்டிக்கப்படவேண்டும். அது எம்பெருமான் திருவுள்ளமறியுமத்தனை. திருப்பாவை ஜீயரென்று ப்ரஸித்திபெற்ற ஆசார்ய ஸார்வபௌமரே கோஷ்டியை அலங்கரித்தருளி யிருந்ததாகவே அனைவருடையவும் பாவனை. உண்மையில் அந்த ஸ்வாமியின் ஸன்னிதான பலத்தினாலேயே அடியேனும் அந்நாட்களில் உடலுக்குப் ப்ரவசப்படாமலிருக்க ப்ராப்தமாயிற்று. (2) இனி இரண்டாவதான ஆனந்தம்—தமிழ், ஆங்கில பாஷைகளில் வெளிவரும் ஸமாசார பத்திரிகைகளினால் உலகமறிந்ததேயாதலால் அதனை நாம் இங்கு விவரிக்க அவசியமில்லை. உலகம் போற்றும் புகழாளரான உயர்திரு, Chief Minister Hon'ble M. பக்தவத்ஸலம் அவர்கள் ஸத்காலக்ஷேபஸபைத் தலைவர்களின் அழைப்புக்கிணங்கி 12—1—65 தேதி மாலையுபந்யாஸ கோஷ்டியை அலங்கரித்திருந்து கௌரவித்ததையும் உள்குழைந்து பேசினதையும் நன்றி பாராட்டி நாமும் வெளியிடக் கடமைப்பட்டுள்ளோம். ஆனாலும் 13—1—65 புதன்கிழமை வெளிவந்த தினமணிப் பத்திரிகையும், 14—1—65 வியாழக்கிழமை வெளிவந்த சுதேசமித்திரன் பொங்கல் மலரும் ஒருவாறு வெளியிட்டிருப்பதால் அந்த வியாஸங்களையே நாம் இங்கெடுத்துக்காட்டி நிற்கிறோம்.

தினமணி வியாஸம் வருமாறு:—

**ஆழ்வார்கள் அருளிய பொக்கிஷங்களை சந்ததிகள் அனுபவிக்கச்செய்யும் வள்ளல்**

## ஸ்ரீ அண்ணங்கராச்சாரியாருக்குப் பொன்னாடைசாற்றி முதல்வர் பாராட்டு

### 35 வருஷ திருப்பாவை காலக்ஷேப பூர்த்தி விழா

ஆழ்வார்கள், ஆசார்யர்கள் விட்டுச்சென்ற பொக்கிஷங்களை வாரி வழங்கி, பின் சந்ததிகள் அனுபவிக்கும் வண்ணம், காஞ்சீபுரம் ஸ்ரீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச் சாரியார் ஸ்வாமிதாம் வகை செய்பவர்கள் என்று முதல் மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் இன்று மாலை கூறினார். திருப்பாவை முப்பது பாசுரங்களையும், மார்கழி மாதம் முப்பது நாட்களிலும், கடந்த 35 ஆண்டுகளாக சென்னையில் காலக்ஷேபம் செய்துவரும்

ஆஸ்தானத்தில் அடியேனுடைய உபந்யாஸங்கள் நடந்துவருமாறு நியமித்தருளினர். முதல்நாளும் முடிவுநாளும் தவிர மற்ற எட்டு நாட்களிலும் இரவு 8 மணி முதல் 10 மணி வரையில் ஸ்ரீ ஸ்வாமியின் ஆத்யக்ஷ்யத்தில் உபந்யஸிக்கும் பாக்கியம் வாய்த்தது. ஜீயர் ஸ்வாமியெழுந்தருளியிருந்தவிடத்தில் திருவீதி முழுவதும் பந்தல்போட்டிருந்தபடியால் "ஸர்வாத்மஸாதாரண நாதகோஷ்டீ பூரேபி துஷ்பூரமஹாவகாசம்" என்னும்படியாக விருந்தது. வ்யபதிஷ்டர்களான மஹான்கள் வித்வான்கள் பலரும் உபஸ்திதர்களா யிருந்தனர். அத்யயநோத்ஸவத்திற்கு ப்ரதாந லக்ஷ்யபூதர் நம்மாழ்வாரொருவரேயாதலால் அவருடைய திவ்ய ஸூக்தி ப்ரபாவ விசேஷங்களே எட்டு நாளும் ஒவ்வோராசார்ய ஸ்ரீ ஸூக்திகளைக்கொண்டு அநுபவிக்கப்பட்டன.

1—2. முதல்நாளுமிரண்டாநாளும் எம்பெருமானாருடைய ஸ்ரீ பாஷ்ய ஸூக்தி களைக்கொண்டு ஆழ்வார் பெருமையநுபவம்.

3. மூன்றாநாளில் ஆளவந்தாருடைய ஸ்ரீ ஸூக்திகளைக்கொண்டு அநுபவம்.

4. நான்காநாளில் கூரத்தாழ்வான் ஸ்ரீ ஸூக்திகளைக்கொண்டு அநுபவம்.

5—6. ஐந்து ஆறும் நாட்களில் பட்டர் ஸ்ரீ ஸூக்திகளைக்கொண்டு அநுபவம்.

7. ஏழாம் நாளில் பிள்ளை லோகாசார்ய ஸ்ரீ ஸூக்திகளைக்கொண்டு அநுபவம்.

8. எட்டாநாளில் "நம்பெருமாளும் மணவாளமாமுனிகளும்."

இவ்வுபந்யாஸங்களையெல்லாம்ஸங்க்ரஹமாகவாவது ஏடுபடுத்தவேணுமென்கிற அபிநிவேச முள்ளது. ச்ரோதாக்கள் பலரும் நியமித்துமுள்ளார்கள். க்ரமேண நிறைவேறவேணும்.

## இனி சென்னை நகர்ச் செய்திகள்

ஏகாதசியன்று மார்கழித் திங்கள் தொடக்கமாகையாலே அன்று சென்னைமாநகர் சென்று சேரவேண்டியதாயிற்று. அவ்விடத்து நிகழ்ச்சிகளையும் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீமதுபயவே. (Advocate) V. ராஜகோபாலாசாரியர் (M. L.) ஸ்வாமியை President ஆகக்கொண்ட ஸத்காலக்ஷேப ஸபையின் சார்பாகவே அடியே னுடைய பிரவசனங்கள் நடைபெற்றுவருகின்றன. 21—2—64ல் அகஸ்மாத் ஏற்பட்ட ஹ்ருதய கோசநோய் காரணமாக, ஷை ஸபா மூலமாய் வாரந்தோறும் நடந்துவந்து கொண்டிருந்த உபந்யாஸங்கள் அறவே நிறுத்தப்பட்டிருந்தன. ஏதோ சில நைமித்திகோபந்யாஸங்கள் மட்டும் நிறுத்தமுடியாமல் நடந்துவந்தன. அந்த ரீதியில் மார்கழித் திங்களுபந்யாஸமும் நிறுத்தப்படவேண்டியிருந்தும் பக்தர்களின் கோரிக்கையை நிராகரிக்க முடியாமையாலும், கோயிலில் எட்டு நாள் உபந்யாஸம் நடத்தின துணிவினாலும் திருப்பாவையுபந்யாஸத்தைத் தொடங்க உத்ஸாஹமுண்டா யிற்று. 15—12—64ல் தொடங்கி ஆறு பாசுரம் வரையில் நிராடங்கமாக நடைபெற்றது. ஏழாநாளில் சரீரத்திற்குப் பரவசப்படநேர்ந்தது. அடியேன் ஆப்தர்களிடம் சொல்லுவது இதுவே. "எழுபத்துமூன்று வயதுவரையில் உடல் எனக்கு அதீனமாயிருந்தது; எழுபத்துநான்காவது வயதில் உடல் என்னைத் தனக்கு அதீனமாக்கிக்கொண்டது" என்று. மார்கழி ஏழாந்தேதிமுதல் பதினேழாந்தேதிவரையில் சயனசரணனாயிருக்க

காஞ்சீபுரம் உபயவேதாந்த வித்வான் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியாருக்குப் பொன்னுடை சாற்றி ஸ்ரீ பக்தவத்ஸலம் பேசினர் 35-வது வருஷாந்தத் திருப்பாவை பூர்த்தி விழா ஸத்காலக்ஷேப சபையின் ஆதரவில் உப்பட்டூர் ராமாநுஜ கூடத்தில் நடந்தது. முதல் மந்திரி ஸ்ரீ பக்தவத்ஸலம் தலைமைவகித்தார்.

## 600 நூல்கள் ஆக்கிய பெருமை

'தினமணி துணை ஆசிரியர் ஸ்ரீ ஏ. ஜி. வெங்கடாச்சாரியார் வரவேற்புரை நிகழ்த்துகையில் ஸ்வாமியின் அருமை பெருமைகளை விவரித்து ஆஸேது ஹிமாசலம் பரவியுள்ள அவருடைய வடமொழி தென்மொழிப் புலமையையும் தெலுங்கு ஹிந்தி உள்பட நாலு மொழிகளிலும் அறுநூறு புஸ்தகங்கள் எழுதியிருப்பதையும் குறிப்பிட்டு பலதரப்பட்ட மகான்களுடன் அவர்கொண்ட தொடர்பையும், பகவத் ராமானுஜர் வேதாந்த தேசிகன், வரவரமுனிகள் ஆகியோரின் கிரந்தங்கள் முழுவதையும் பிரசுரித்த திறமையையும் நம்பிள்ளை ஸந்நிதியைக் கட்டி நிர்வகிப்பதையும் போற்றினர்.

உபந்யாஸ வரிசையில் "மாலே மணிவண்ணா" "கூடாரைவெல்லும் சீர்க் கோவிந்தா" ஆகிய இரண்டு பாசுரங்களும் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியார் ஸ்வாபதேசம் அந்யாபதேசம் இரண்டையும் விஸ்தாரமாக இரண்டரை மணி நேரம் பேசினர்.

முதல் அமைச்சர் ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் ஸ்வாமிக்குப் பொன்னுடை போர்த்தி விட்டுப் பேசுகையில் ஸ்வாமியின் உபந்யாசங்களை முழுவதையும் கேட்கத் தாம் கொடுத்து வைக்கவில்லையே என்ற வருத்தத்தைத் தெரிவித்தார். "ஸ்வாமியின் பாண்டித்யம் மகத்தானது; அவர் கற்றவர் மட்டும் அல்ல; கற்றுணர்ந்தவர். அதை நமக்கு எடுத்து உரைக்கவல்லவர். நம் ஆழ்வார் ஆசாரியர்கள் விட்டுப்போன பொக்கிஷங்களை நமக்கு வாரி வழங்கி வருகிறார். அந்த பொக்கிஷங்களை வாரிசாக நாம் எல்லோரும் அநுபவிப்பதற்கு ஸ்வாமி போல்வார்தான் வகைசெய்பவர்கள். அன்றாடம் அரிசி, பருப்பு, துணி, மணி இவற்றையே தேடுகிறோம். பொருள் இல்லாதாருக்கு இவ்வுலகம் இல்லை என்பது உண்மைதான். இருந்தாலும் ஐசுவரியத்தில் மூழ்கித் திளைப்பவர்கள் வாழ்க்கையில் நிறைவு காணமல் ஏதோ ஒரு குறையையே காண்கிறார்கள். அவ்விதக் குறை இல்லாமல் நிறைந்த வாழ்க்கை வாழ்வதற்கு இம்மாதிரி பக்திப் பாடல் பொக்கிஷங்களை ஸ்வாமிகளின் வாக்கிலிருந்து கேட்டு அநுபவிப்பது புண்ணியம். அவர் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து நம்மை இன்னும் மகிழ்விக்க வேண்டுமென்று பிரார்த்திப்போமாக. ஸ்வாமியைப்போல் நாவன்மை படைத்தவர் வெகுசிலரே. ஆகையால் அவருடைய பாண்டித்யத்தையும் நாவன்மையையும் பக்திப்பெருக்கையும் நன்கு பயன்படுத்திக்கொள்ளவேண்டும்" என்று கூறி முடித்தார்.

சபைத்தலைவர் ஸ்ரீ வி. ராஜகோபாலாச்சாரியார் நன்றி கூறுகையில் முதல் அமைச்சருக்குப் பொன்னுடைபோர்த்தி சபையாரின் நன்றியைத் தெரிவித்தார்.

முதல் அமைச்சர் ஸ்வாமியின் வைபவத்தில் தமக்குச்செய்த மரியாதையை மறுக்க இயலாமல் ஏற்றுக்கொண்டதாக உரைத்தார். ... ... ★

சுதேசமித்திரன் வியாஸம் வருமாறு :—

## ஸ்ரீ அண்ணங்கராச்சாரியாரின் சேவைக்குப் பாராட்டு

கடந்த 35 ஆண்டுகளாக மார்கழித் திங்கள்தோறும் சங்கத் தமிழ்மாலை முப்பதும் (திருப்பாவை) தப்பாமே உபந்யஸித்துவந்த காஞ்சீபுரம் வித்துவான் P. B. அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமிக்கு முதலமைச்சர் ஸ்ரீ பக்தவத்ஸலம் நேற்று மாலை பொன்னாடை போர்த்தி கௌரவித்தார். சத் காலக்ஷேப சபையின் ஆதரவில் நடைபெற்ற இவ்விழாவில் ஸ்ரீ ஏ. ஜி. வேங்கடாச்சாரியார் அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியாரின் பாண்டித்யமும் அறிவாற்றலையும் எடுத்துக் கூறி ஹிந்தி மொழி உட்பட நான்கு மொழிகளில் சுமார் 600-க்கு மேற்பட்ட அரிய நூல்களை அவர் இயற்றியிருப்பதாகக் கூறினார்.

முதலமைச்சர் ஸ்ரீ பக்தவத்ஸலம் பேசுகையில், ஆழ்வார்களின் அருளிச்செயல்களின் உண்மைப் பொருளை நல்லமுறையில் பக்தர்களுக்கு விளக்குவதற்கு வித்வான் அண்ணங்கராச்சாரியார் போன்றவர்களால்தான் இயலும் என்றும், அன்னாருடைய பாண்டித்யம் மிகவும் உயர்ந்தது என்றும் கூறினார். உலக வாழ்க்கையின்பங்களில் ஆழ்ந்து ஈடுபட்டுள்ள மக்களுக்கு ஆத்மீக உணர்வு, கடவுள் பக்தி தேவை என்றும், ஸ்ரீ அண்ணங்கராச்சாரியார் போன்ற வித்வான்களின் உபந்யாசங்களைக் கேட்பதன் மூலம் பக்தி உணர்ச்சி ஏற்படும் என்றும் கூறினார். சபையின்சார்பில் முதலமைச்சருக்கும் பொன்னாடை போர்த்தப்பட்டது. ஸ்ரீ வி. ராஜகோபாலாச்சாரி வந்தனோபசாரம் கூறினார். [ஆக இது சுதேசமித்திரன் வெளியீடு]

13—1—65ல் இண்டியன் எக்ஸ்பிரஸ்ஸில் வெளிவந்த வியாஸம் வருமாறு :—

## ANNANGARACHARI SWAMI HONOURED

Sri P. B. Annangarachariar Swami of Kancheepuram was honoured with Ponnadai today by the Chief Minister on the completion of his 35th annual Thiruppavai discourse under the auspices of the Sath Kalakshepa Sabha.

Sri Annangarachariar has been delivering these discourses every Margazhi without a break for the past 35 years.

Mr. Bhaktavatsalam referred to the great learning of Sri Annangarachariar and said spiritual treasures left by the Alwars could be expounded adequately only by scholars of Sri Annangarachariar's stature.

The Chief Minister said that important as material comforts were, mere materialism always, left a void. Spiritual pursuits such as the study of devotional literature and listening to religious discourses filled the void.

செய்தருளினுன். திருவவதாரங்களில் பெரும்பாலும் காட்டியருளினது ஸௌலப் யத்தையே. திருவவதாரத்தைப்பற்றி இதிஹாஸபுராணங்களில் பேசியிருக்கின்றதே யல்லது வேதத்தில் பேசியிருக்கவேயில்லையென்று சிலர் கூறுவதுண்டு. அது தவறு. "**அஜாயமாநோ பஹுதா விஜாயதே**" என்கிற வேதவாக்கியம் அந்தணர்களனைவரு மறிந்தது. **அஜாயமாந:**—பிறப்பிலியாயிருக்கச் செய்தேயும், **பஹுதா விஜாயதே**—பலபடியாகப் பிறக்கிருன் எம்பெருமான்—என்பது இந்த வேதவாக்கியத்திற்குப் பொருள். மத்ஸ்யகூர்மாதி விபவாவதாரங்களையெல்லாம் உட்கொண்டேயன்றே இந்த ச்ருதிவாக்கியம் அவதரித்தது. இதன் பொருளை மற்றொருபடியாகச் சொல்ல நினைத்தால் 'பரத்வசாலியாயிருக்கச் செய்தேயும் ஸௌலப்யசாலியாயுமிராநின்றுன்' என்று சொல்லத் தட்டில்லை. இதுதான் உண்மைப் பொருள்.

இப்பொருளை நன்ருக விவரித்துக் காட்டுகின்றது மற்றொரு ச்ருதிவாக்யம். அதாவது "**பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ**" என்பது காடகச்ருதி வாக்யம். இதன் பொருளாவது, எம்பெருமான் ஸகல லோக பிதாவாயிருக்கச் செய்தேயும் தன்னுடைய புத்திரர்களைத் தனக்குப் பிதாவாகக் கொண்டு எங்கின்ற யோனியுமாய்ப் பிறக்கிருன் என்பதாம். இந்த ச்ருதிவாக்யத்தில் ஸௌலப்யம் ஸுஸ்பஷ்டமாகவே காட்டப்பட்டு விட்டது. ஸகல ஜகத் காரண பூதனுகவேயிருக்க வேண்டியவன் கார்ய பூதனுமாகிருனென்ருல் ஸௌலப்யத்தை இதைவிட வேறுவிதமாகச் சொல்லுவ தெங்ஙனம்? முக்கியமாக வொன்று தெரிவிக்கப் படுகிறது. நம் ஆசாரியர்கள் திருமந்திரத்தி லுள்ள நாராயண பதத்தை விவரிக்குமிடத்து நாராயண பதத்திற்கு ஷஷ்டீதத்புருஷ ஸமாஸமும் பஹுவ்ரீஹி ஸமாஸமுமாகிற இரண்டு ஸமாஸங்கள் காட்டிப் பொருளை விளக்கி "**இவற்ருல் பலித்தது பரத்வ ஸௌலப்யங்கள்**" என்று நிகமித்தார்கள். திருமந்த்ரார்த்த மாகையாலே இதனை நாம் இங்கு விவரிக்கின்றிலோம். ரஹஸ்ய வியாக் கியானங்களிலே கண்டு கொள்வது. சாஸ்த்ரஜ்ஞர்கள் சில விஷயங்களை '**தர்மிக்ராஹக மாநஸித்தம்**' என்பர்கள் இங்குமப்படியே; பராத்பரனை எம்பெருமானுக்கு வாசகமான திருநாமங்களுள் தலைமை பெற்றதான நாராயண நாமத்தை நாம் ஸ்மரிக்கும்போதே ஸௌலப்யமும் தோன்றியே தீருமென்றதாயிற்று.

அன்றியும் "**இதம் விஷ்ணுர் விசக்ரமே த்ரேதா நிதகே பதம்**" என்பது முதலான வேதவாக்கியங்கள் எம்பெருமானுலகளந்த சரிதையைச் சொல்லுகின்றன. இவ்வபதானத்திஞல் பரத்வம் விளங்குகிறதா? ஸௌலப்யம் விளங்குகிறதாவென்று சர்ச்சைசெய்த பெரியார்கள் பரத்வம் விளங்குகின்றதென்னும் பக்ஷத்தை மறுக்காமல் ஸௌலப்யம் மிக விளங்குகின்றதென்று திருவுள்ளம் பற்றினுர்கள். "தாவியன்றுலக மெல்லாம் தலை விளாக்கொண்டவெந்தாய்!" என்கிற திருமாலைப் பாசுரத்தின்படி வஸிஷ்ட சண்டாள விபாகமற யுகபதேவ எல்லாரையும் விஷயீகரித்தது ஒப்பற்ற ஸௌலப்ய கார்யமன்றே. இஃதொன்றே போதுமே வேதத்தில் ஸௌலப்ய ப்ரதிபாதன முண்டென்றறிய.

ஆக இவ்வகைகளாலே, வேதத்தில் பரத்வகீர்த்தனம் மட்டுமேயன்று ஸௌலப்யா நுபவமும் புஷ்கலமாக வுண்டென்று தேவப்பெருமாள் திருமுன்பே புநர்வஸு பத்ராதிப ஸ்வாமியிடம் விஜ்ஞாபித்து முடிக்கப்பட்டது. ... ★

16—1—1965

Mr. Bhaktavatsalam was also honoured with a Ponnadai on the occasion by the Sabha.

Mr. A. G. Venkatachari, who wetlcomed the gathering, referred to the Swamiji's erudition and his authorship of over 600 books in four languages including Hindi.

Mr. V. Rajagopalachari, President of the Sabha, proposed a vote of thanks. ... ... ... ★

## தேவப்பெருமாள் சீவரவுத்ஸவ நிகழ்ச்சி

முடிவாக ஒரு ஸம்பாஷணைச் செய்தியை வெளியிட்டு இந்த வியாஸத்தை முடிக்கின்றேன். காஞ்சீபுரம் தேவப்பெருமாள் கண்டருளும் வெளியூர் மஹோத்ஸவங்களில் சீவர உத்ஸவம் என்பதுமொன்று. தைமீ முதல் தேதியன்றிரவு 11 மணிக்குக் கோவிலைவிட்டுப் புறப்பட்டு மறுநாள் காலை 9. 10 மணிக்குள்ளாகப் பழைய சீவரம் மலை மேலுள்ள மண்டபத்திற்கெழுந்தருளும் மஹோத்ஸவம் இது. **ஜீயர்புரம்** என்பது சீவரம் என்று திரிந்து வழங்கலாயிற்றென்பர் பெரியோர். ஸ்ரீரங்கப்ராந்தத்தில் ஜீயர் புரமென்றே ஓரிடம் வழங்கி வருகின்றது. இது நிற்க ஆண்டு தோறும் தை மீ இரண்டாந்தேதியன்று மாலை 4 மணி முதல் 7 மணிவரை சீவரம் மலைமேல் தேவப்பெருமாளுடைய உத்ஸவம் வெகு விபவமாக நடைபெறுவது. பதினுயிரக் கணக்கான பக்த ஜனங்கள் கூடும். சென்னைமாநகரிலிருந்து பலபல ஆஸ்திக மக்களும் வந்து ஸேவிப்பர்கள். அன்று அடியேனும் ஸேவிக்கச் சென்றிருந்த போது மைலாப்பூரிலிருந்து அவ்விடம் வந்திருந்த பரமாப்தரும் சிரகால மித்திரருமான புநர்வஸு பத்திராதிபரைச் சந்தித்து வெகு நேரம் ஸம்பாஷிக்க நேர்ந்தது. பலவகைப் பேச்சுக்களில் அந்த மஹான் கேட்ட ஒரு கேள்விக்கு அடியேனுரைத்த உத்தரம் பலர்க்கும் தெரிந்திருப்பது நலமென்று தோன்றி அந்த வினு விடைகள் இங்கு வெளியிடப் படுகின்றன;

**(வினு)** வேதத்தில் எம்பெருமானுடைய பரத்துவம் மட்டும் ஓதப்பட்டிருப்பதாகவும், ஸௌலப்யம் எங்குமே பேசப்பட்டிருக்கவில்லை யென்பதாகவும் பல பண்டிதர்கள் பேசக் கேட்டிருக்கிறேன்; இஃது உண்மை தானே?

**(விடை) அடியேன் விஜ்ஞாபித்தது வேதத்தில் ஸௌலப்யமும் சொல்லப் பட்டிருப்பதாகவே.** ஸௌலப்யமில்லாத பரத்துவமும், பரத்வமில்லாத ஸௌலப்யமும் புகழத் தக்கவையல்ல வென்பது ஆசாரியர்களின் திருவுள்ளம். "பரத்வங்கண்டு அகலாமைக்கு ஸௌலப்யம்; ஸௌலப்யங்கண்டு இகழாமைக்குப் பரத்வம்" என்பது ஆசாரியர்களின் திருவாக்கு. மேருமலை, கைலாஸமலை, க்ஷீராப்தி — இத்யாதிகளில் பரத்வமிருந்தும் ஸௌலப்யமில்லை. காஷ்டலோஷ்டாதிகளில் ஸௌலப்யமிருந்தும் பரத்வமில்லை. பரத்வ ஸௌலப்யங்களிரண்டும் ஸாமாநாதிகரண்யம் பெற்றுப் பொலிவது எம்பெருமானிடத்தில்தான். ஸௌலப்யத்தை நடவடிக்கைகளால் காட்டமுடியுமேயல்லது வேறுவகையினுல் காட்ட இயலாது. அதற்காகவே பகவான் பலபல திருவவதாரங்களைச்

# ஸ்ரீராமாநுஜ சரித்ர தத்துவம்

— ஸ்ரீகாஞ்சீ P. B. அண்ணங்கராசாரியர் —

## முன்னுரை.

பி. ஸ்ரீ. என்று ப்ரஸித்தரான ஓர் ஆசிரியர் சில மாதங்களுக்கு முன்பு ஸ்ரீராமாநுஜர் என்றொரு தமிழ் நூல் மிக விரிவாக வெழுதி வெளியிட்டிருந்தாராம். ஆனல் அதனை நான் இன்றுவரை பார்வையிட நேரவில்லை. வெகு நேர்த்தியாக எழுதப்பட்டிருப்பதாக மட்டும் செவியுறுகின்றேன். அவ்வாசிரியர் சிறந்த ஆஸ்திகர். பல நூல்களைப் படித்தவர்; ஆழ்ந்த ஆராய்ச்சிகளிலும் வல்லுநர். அவர் எழுதிய தென்றால் மேம்பட்டிருக்குமென்கிற நம்பிக்கை எனக்குண்டு. ஆனல் சரித்திர விஷயங்களில் அபிப்ராய பேதங்கள் ஏற்படுவது ஸஹஜம். ஸ்ரீராமாநுஜரைப் பற்றிப் பலர் பல நூல்களை வசன நடையில் எழுதியுள்ளார்கள். அவற்றில் பி. ஸ்ரீ. நம்பிக்கை கொண்டு சில புதிய விஷயங்களையும் எழுதியிருக்கக் கூடும். அவை எந்த ஆதாரத் தைக்கொண்டு எழுதப்பட்டவை யென்று விமர்சிப்பது நடுநிலையாளர்க்கு உரித் தாகும். 3—1—65 Sunday வெளிவந்த ஹிண்டுவில் S. N. ஸ்ரீராமதேசிகன் என்னு மொரு நண்பர் அப்புத்தகத்தை விமர்சிக்கப் புகுந்து எழுதியிருப்பவைகளை வாசித் தேன். உலகுக்குத் தெளிவு பிறப்பிக்க வேண்டுவது மிக அவசியமென்று தோன் றினமையால் இஃதெழுதுகின்றேன். இதன் ஸாரம் ஆங்கிலத்திலும் வெளிவரும். *

---

ஸ்ரீ வைஷ்ணவமத ஸ்தாபநாசாரியரான ஸ்ரீ ராமாநுஜர்காலம் இற்றைக்கு ஏறக்குறைய ஆயிரம் வருஷமாகிறது. அப்பேராசிரியருடைய சரித்திரங்களின் உண்மையை நாம் தெரிந்து கொள்வதும் பிரவசனம் செய்வதும் பரிகணிதர்களான முன்னோர்களின் நூல்களைப் பின்பற்றியே யாகவேண்டும். ஆழ்வார்களெல்லாருடை யவும் ஸ்ரீமந்நாதமுனிகள் முதலாக நம்பிள்ளைவரையிலுமுள்ள ஆசாரியர்களுடையவும் சரித்திரங்களைத் தெரிந்துகொள்ளத் தென்மொழியிலும் வடமொழியிலும் புராதன நூல்கள் பிராமாணிகங்களாகத் தொன்றுதொட்டுக் கொள்ளப்பட்டு வருகின்றன. தென்மொழியில் குரு பரம்பராப் பிரபாவம் என்கிற நூல் நம்பிள்ளையின் சிஷ்யரான பின்பழகிய பெருமாள் ஜீயரால் அருளிச் செய்யப்பட்டது. இதற்கு ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்று ப்ரஸித்தி. பன்னீராயிரப்படி குருபரம்பரையென்றும் மூவாயிரப்படி குருபரம்பரையென்றும் அச்சிடப் பட்டிருப்பவை மிகப் பிற்பட்டவர்க ளால் எழுதப்பட்டவை யாதலால் அவை பிரமாணங்களாகக் கொள்ளப்பட உரியன வல்ல. முன்னம் சொன்ன ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவமானது குருமுகமாகக் கேட்கும் காலக்ஷேப க்ரந்தங்களுள் ஒன்றாகக் கொள்ளப்பட்டு இற்றைக்கும் அது காலக்ஷேபக்ரந்தமாகவே விளங்கி வருகின்றது. இந்த நூலை ஒருசாரார் அப்ரமாண மென்றால் இதைப்பற்றி இங்கு நாம் போராட வருகின்றிலோம். ஒருவகுப்பினரின் கருத்தின்படி இது அப்ரமாணமாகவே யிருந்திடுக. இதிலும் சிற்சில சரித்திரங்கள் இடைச் செருகலாய்ப் புகுந்திருக்குமோவென்று பெரியார்கள் சங்கிப்பதுண்டு. ஸ்ரீ ராமாநுஜநுடைய கீதாபாஷ்யத்திற்குத் தாத்பர்ய சந்திரிகையுரை யெழுதிய ஸ்ரீமந் நிகமாந்தவாசிரியர் (அத்யாயம் 11, ச்லோகம் 27ல்) எழுதுகிறார்—'மூன்று

ஸ்ரீ:

# புத்தாண்டு பிறப்பு

நமது ஸ்ரீராமாநுஜன் பதினாறு பிராயங்களைச் சுகமாகக் கடத்தி இன்று பதினேழாவது பிராயத்தில அடிவைத்து விட்டது. ஸ்ரீவைஷ்ணவ வுலகுக்கும் ஆஸ்திகவுலகுக்கும் தார்மிகவுலகுக்கும் இதுகாறும் ஸேவை செய்ததுபோலவே இனியும் செய்யக் கடமைப்பட்டிருக்கின்றது. இதற்கு ஏற்பட்டுள்ள ஸ்வல்பசந்தாவை நம்முடைய வேண்டுகோளை எதிர்பாராமல் கால காலத்தில் தாமாகவே செலுத்தி உதவிபுரிந்து வருகின்ற மஹான்கள் பண்டு போலவே மேன்மேலும் உபகரித்துவரக் காத்திருக்கிறார்கள். ஆகவே அவர்களைப்பற்றி இங்கு நாம் வேண்டிக்கொள்ள வேண்டியது ஏதுமில்லை. உபகரிக்க மனமில்லாமல் உபேக்ஷித்து வருபவர்களும் தங்கள் இயல்பை மாற்றிக்கொள்ளப் போகின்றிலர்; அன்னவர்களைப் பற்றியும் ஈண்டு எழுதவேண்டியதொன்றுமில்லை. "ஆள்கின்றானாழியான் ஆரால் குறையுடையம்" என்கிற நம்மாழ்வார் பாசுரத்தை மனமாரச் சிந்தனை செய்து நாம் விசாரமற்ற நெஞ்சினராய் மிக்க மகிழ்ச்சியுடனேயே இதனை நடத்தி வருகின்றோம்.

இதை மட்டுமன்று; வைதிகமநோஹரா என்கிற ஸம்ஸ்க்ருத ஹிந்தீ பத்ரிகையையும், 'ஸ்ரீராமாநுஜபத்ரிக' என்கிற தெலுங்கு பாஷைப்பத்ரிகையையும் சந்தாதாரர்களின் உதவியில் கண்ணோட்டமில்லாமலே 'நமக்குக் கர்த்தவ்யம்' என்கிற உறுதிகொண்டே நடத்தி வருகின்றோம். நாம் பிறக்கும்போது ஒரு காசு கொண்டு வந்திலோம்; இறக்கும் போதும் ஒன்று கொண்டு போவோமல்லோம். அரைநாண் கயிற்றையும் அறுத்துக்கொண்டு போகவிடுகின்றார்கள். இதனை நன்கு விமர்சிக்க வல்லவர்கள் பொருளின் வரவையும் செலவையும் பொருள்படுத்தக் காரணமில்லை.

ஆனால் ஒன்றுமட்டும் நம்முள்ளத்தில் வேலை செய்கின்றது. ஐந்து நிமிஷத்தில் ஏடுவடாகத் தள்ளிப் பார்த்துவிட்டுக் கீழே எறியப்படுகின்ற பத்ரிகைகளுக்கு லக்ஷக் கணக்கில் சந்தாதாரர்கள் சேருகின்றார்கள் என்பதேயாம் அது. ஆகாசத்தில் பந்தல் போடப்படுகின்றதென்றால் அதைக் காண லக்ஷக்கணக்கான ஜனங்கள் குழுமுகின்றார்களென்பதும், நிலத்தில் போடும் பந்தலில் வியப்புறுவாரில்லையென்பதும் உள்ளது தானே.

அன்பர்களைப் பிரார்த்திக்க வேண்டுவது நம்முடைய கடமை. அதனால் அன்பர்களையும் அபிமானிகளையும் நோக்கிப் பிரார்த்திக்கின்றோம்—நமது ஸ்ரீராமாநுஜனை முன்போலவும் முன்னிலுங்காட்டில் விசேஷமாகவும் அபிமானிக்க வேணுமென்று.

இப்பத்திரிகையில் வெளிவரும் விஷயங்கள் யாவும் ஆஸ்திக வைதிகர்களுக்கு அதிமாத்ரம் ஆனந்த ஸந்தாயகமாயிருக்கின்றன வென்னுமிடத்தை அடிக்கடி ஆப்தர்கள் அருளும் திருமுகங்களினாலறிந்து அகமகிழ்கின்றோம். இந்த நிலைமை மேன்மேலும் அபிவிருத்தியடைந்து செல்லுமென்பதை நாம் விஜ்ஞாபிக்க வேணுமோ?

எம்பெருமான் தன்னுடைய அவதார ப்ரயோஜனங்களைப் பேசுமிடத்து "பரித்ராணாய ஸாதூநாம்" என்ற வளவோடு நில்லாமல் "விநாசாய ச துஷ்க்ருதாம்" என்றும் பேசினபடியாலே ஸன்மத ஸ்தாபனத்தோடு கூட துர்மத நிரஸனமும் ப்ராப்தமே யென்கிற அத்யவஸாயத்தினால் நமது ஸ்ரீராமாநுஜனில் ஸன்மத ஸ்தாபன பரங்களான வியாஸங்களோடு கூட துர்மத நிரஸன நிபுணங்களான வியாஸங்களையும் ஊடேயூடே வெளியிட்டு வருகிறோம். எந்த விஷயத்திலும் விவக்ஷிதங்களும் வக்தவ்யங்களுமான அம்சங்களை உபேக்ஷிப்போமல்லோம். ஆகவே பரமத நிரஸன பரங்களான வியாஸங்களும் இப்பத்ரிகையில் இடம்பெறுவதுபற்றிப் பிராமாணிகர்கள் உகந்தேயிருப்பார்கள். .... .... .... .... *

## ஸ்ரீராமாநுஜன்- 193

சென்னை ஸத்காலக்ஷேபஸபையின்மூலம் ஜகதாசார்ய **P. B.** அண்ணங்கராசாரிய ஸ்வாமியின் திருப்பாவையுபந்யாஸ கோஷ்டியில் 12-1-65-ல் விஜயம் செய்த முதல்வர் உயர்திரு. பக்தவத்சலம் பொன்னுடை போர்த்த காட்சிகள்.





**12–1–65** ஸத்காலக்ஷேபஸபையில் திரு பக்தவத்ஸலம் அவர்களுக்கு ஸ்ரீ **V.** ராஜகோபாலாச்சாரி பொன்னாடை போர்க்கிறார்.





தினமணி உதவியாசிரியர் ஸ்ரீ A. G. வெங்கடாசாரியார் பேசுகிறார்.



